# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

மாசி
பிப்ரவரி — 1980



ஸ்ரீராமகிருஷ்ண மடம்,
மயிலாப்பூர் :: சென்னை-600 004.

ரூ. 1-20

# ஆசிரியர் 'அண்ணு' உரை எழுதிய எங்கள் நூல்கள்

நாகரத்திலும் தமிழிலும் மூலமும் பதவுரை, பொழிப்புரைகளும்
விளக்க உரையும் குறிப்புகளும் உள்ளன

| | ரூ. | பை |
|---|---|---|
| ஈச-கேன-கட உபநிஷதங்கள் | 3 | 00 |
| காலிகோ | 5 | 00 |
| ப்ரச்ன-முண்டக-மாண்டுக்ய-ஐதரேய உபநிஷதங்கள் (பக்கம் 172) | 5 | 00 |
| தைத்திரீய உபநிஷத்து (பக்கம் 91) | 3 | 00 |
| சாந்தோக்ய-ப்ருஹதாரண்யக உபநிஷத்துக்களின் ஸாரம், ப்ரஹ்மஸூத்ரத்துடன் (மூன்ருவது பதிப்பு) பக்கம் 320 | 6 | 00 |
| காலிகோ | 9 | 00 |
| மஹாநாராயண உபநிஷத்து (தைத்திரீய நாராயணவல்லி) | 5 | 00 |
| ஸ்ரீமத்பகவத்கீதை | 8 | 00 |
| ஸ்ரீமத் பகவத்கீதை (பாராயணம்) | 4 | 00 |
| ஸ்ரீமத் பகவத்கீதை மூலம் (தமிழ்) பாக்கட் சைஸ் | 2 | 00 |
| ஸ்ரீமத் பகவத்கீதை வெண்பா (முத்து ஐயர் இயற்றியது) | 2 | 00 |
| ஸ்ரீ ருத்ரம்-சமகம் (மஹாந்யாஸத் துடன்—பக்கம் 296) | 6 | 50 |
| காலிகோ | 10 | 00 |
| தைத்திரீய மந்த்ரகோசம்:— | | |
| தமிழில் ஸ்வரத்துடன் | 6 | 00 |
| நாகரத்தில் ஸ்வரத்துடன் முதல்பாகம் | 2 | 50 |
| ஷெ இரண்டாம் பாகம் | 8 | 00 |
| தேவி பாகவதஸாரம் முதல் பாகம் | | |
| சாதா பைண்டு | 15 | 00 |
| காலிகோ பைண்டு | 20 | 00 |
| ஸ்ரீதேவிமாஹாத்மியம் | 9 | 00 |
| ,, அட்டை பைண்டு | 12 | 00 |
| தேவி ஸ்தோத்தரங்கள் | 2 | 50 |
| உபநயனம் | 3 | 00 |
| காலிகோ | 5 | 00 |
| குருகீதை | 3 | 25 |
| நாரத பக்தி ஸுத்திரங்கள் | 1 | 75 |

| | ரூ. | பை. |
|---|---|---|
| ஜபவிதானம் | 4 | 00 |
| ஸந்தியாவந்தனம் (தமிழ்) | 2 | 00 |
| ,, காலிகோ | 4 | 00 |
| ,, ,, (நாகரம்-தமிழ்) | 4 | 00 |
| தேவிஸூக்தங்களும் உபநிஷதங்களும் | 1 | 50 |
| புருஷஸூக்தம் | 2 | 25 |
| பூஜாவிதானம் (தமிழ்) | 8 | 00 |
| ,, (நாகரம்) | 4 | 50 |
| காலிகோ | 6 | 00 |
| ஸ்ரீமத் பாகவத ஸாரம்: முதல் பாகம் (ஸ்கந்தம் 1-9) பக்கம் 560 | 10 | 00 |
| ஷெ இரண்டாம் பாகம் (ஸ்கந்தம் 10-12) பக்கம் 560 | 12 | 50 |
| ஸௌந்தர்யலஹரி பாஷ்யம் | 7 | 50 |
| ஸௌந்தர்யலஹரி (மூலம்)—(நாகரம்-தமிழ்) | 1 | 50 |
| சிவானந்தலஹரி பாஷ்யம் | 4 | 00 |
| ,, (மூலம்) | 1 | 00 |
| சிவ ஸ்தோத்திரங்கள் | 1 | 50 |
| ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம பாஷ்யம் | 10 | 00 |
| ,, ,, பாராயணம் | 3 | 00 |
| ,, ,, மூலம் | 2 | 00 |
| ஸ்ரீ லலிதா த்ரிசதி பாஷ்யம் | 6 | 00 |
| ஸ்ரீ லலிதா த்ரிசதி ஸ்தோத்ரம் | 1 | 00 |
| ஸ்ரீவித்யா | 5 | 00 |
| ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யம் | 7 | 00 |
| ,, ,, ஸ்தோத்ரம் (பாராயணத்திற்குரியது, | 3 | 00 |
| ஸ்ரீ விஷ்ணு ஸ்தோத்ரங்கள் | 1 | 00 |
| பஜகோவிந்தம் | 1 | 00 |
| அஷ்டோத்தர சத நாமாவளிகள் | 2 | 00 |
| ஆதித்ய ஹ்ருதயம் | (அச்சில்) | |
| சித்தி விநாயக பூஜை | 0 | 50 |
| நவராத்திரி பூஜை | 0 | 50 |

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

| தொகுதி—60 | பிப்ரவரி 1980 | இதழ்—2 |
| --- | --- | --- |

## பொருளடக்கம்



# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை

—திருமூலர்

| | | |
|---|---|---|
| தொகுதி 60 | சித்தார்த்தி ஞூ மாசி மீ | இதழ் 2 |





अगाधेऽत्र संसारपङ्के निमग्नं कलत्रादिभारेण खिन्नं नितान्तं ।
महामोहपाशौघबद्धं चिरान्मां समुद्धर्तुं अम्बत्वम् एकैव शक्ता ॥

அகாதேத்ர ஸம்ஸார-பங்கே நிமக்நம்
களத்ராதிபாரேண கிந்நம் நிதாந்தம் ।
மஹா-மோஹ-பாசௌக-பத்தம் சிராந்மாம்
ஸமுத்தர்த்தும் அம்ப த்வம் ஏகைவ சக்தா ॥

—ஸ்ரீ சங்கரர் (தேவீ புஜங்கம்)

ஆழங்காணவொண்ணாத சம்சாரச் சேற்றுக்குழி! மனை மக்களான பாரம் வேறு அழுத்துகிறது! இதிலிருந்து விடுபட மாட்டாமல், மோகமும் பற்றுமாகிய கயிறுகள் உடல் முழுவதையும் நெடுங்காலமாகப் பிணைத்திருக்கின்றன. இந்த நிலையில் என்னைக் கடைத்தேற்ற, நீ ஒருத்தியே ஆற்றல் பெற்றவள்.

தாயாகித் தந்தையுமாய்த் தாங்குகின்ற தெய்வம்!
தன்னைநிகர் இல்லாத தனித்தலைமைத் தெய்வம்!
வாயார வாழ்த்துகின்றோர் மனத்தமர்ந்த தெய்வம்!
மலரடி என் சென்னிமிசை வைத்தபெருந் தெய்வம்!
காயாது கனியாகிக் கலந்தினிக்கும் தெய்வம்!
கருணை நிதித்தெய்வமுற்றும் காட்டுவிக்கும் தெய்வம்!
சேயாக எனைவளர்க்கும் தெய்வமகா தெய்வம்!
சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம்!

—திருவருட்பா



# ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருள் வாக்கு

**சனிக்கிழமை, டிசம்பர் 27, 1884**

அது கிறிஸ்துமஸ் சமயம். எனவே பக்தர்களுக்கு விடுமுறை கிடைத்திருந்தது. பல பக்தர்கள் விடுமுறையைப் பயன்படுத்தி ஸ்ரீராமகிருஷ்ணரைத் தரிசிக்க வந்திருந்தனர். பலர் காலையிலேயே வந்து விட்டனர்.

ம-வும் சாரதா பிரசன்னரும் அங்கு வந்தபோது ஸ்ரீகுருதேவர் தமது அறையின் தெற்குத் தாழ்வாரத்தில் இருந்ததைக் கண்டனர். அவர்கள் இருவரும் ஸ்ரீகுருதேவரைச் சாஷ்டாங்கமாக வீழ்ந்து நமஸ்கரித்தனர்.

குருதேவர் ம-விடம், ''பங்கிமை அழைத்து வருகிறேன் என்று சொன்னாயே; அவன் எங்கே, வரவில்லையா?'' என்று கேட்டார். பங்கிம் ஒரு பள்ளி மாணவன். அவனைக் குருதேவர் ஒரு சமயம் பாக்பஜாரில் பார்த்திருந்தார். மிகவும் தூரத்திலிருந்து அவனைப் பார்த்தே குருதேவர், 'அவன் நல்ல பையன்' என்று குறிப்பிட்டிருந்தார்.

ம-தாம் கொண்டு வந்திருந்த 'தேவி சௌதுராணி' என்ற நாவலிலிருந்து பின்வரும் வரிகளைப் படித்தார்: ''எப்படி மலரின் நறுமணம் மூச்சுக்குப் பிரத்தியட்சமாக இருக்கிறதோ அதுபோல இறைவன் மனதிற்குப் பிரத்தியட்சமாக இருக்கிறான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ஆம், கடவுளை மனம் பிரத்தியட்சமாக உணர்ந்து கொள்கிறது. ஆனால் அது சாதாரணமாக இருக்கும் இந்த மனதினால் அல்ல. பரிசுத்தம் பெற்ற தூய மனம் கடவுளை உணர்கிறது. அந்த நிலையில் இந்தச் சாதாரண மனம் இல்லாமல் அழிந்தே போகிறது. லௌகிகப் பற்றின் சாயல் சிறிதளவு இருந்தாலுங்கூட அத்தகைய மனம் தூய மனம் அல்ல. எல்லாவித அசுத்தங்களும் நீங்கிய நிலையிலுள்ள மனதைத் தூய மனம் என்று சொல்லலாம். அதைத் தூய ஆத்மா என்றும் சொல்லலாம்.

ம-சிறிது நேரம் அந்தப் புத்தகத்தைப் படித்தார். அதைத் தொடர்ந்து குருதேவர் பக்தர்களுடன் பேசத் துவங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ஹா! எந்த எந்த நிலைகளில் இருந்திருக்கிறேன்! சில காலம் பார்வதி பரமேசுவரனைக் குறித்த தெய்விகச் சிந்தனையில் தோய்ந்திருந்தேன். சில காலம் ராதையும் கிருஷ்ணனையும் பற்றிய நினைவிலேயே ஆழ்ந்திருந்தேன். சில காலம் சீதையும் ராமனையும் பற்றிய பாவத்தில் இருந்தேன். ராதையின் மனநிலையில் இருந்தபோது 'கிருஷ்ணா! கிருஷ்ணா!' என்றும், சீதையின் மனநிலையில் ஊறியிருந்தபோது 'ராமா! ராமா!' என்றும் சொன்னபடியே இருந்தேன்.

ஆனால் லீலைக்கு ஒரு முடிவே இல்லை. இப்படிப் பட்ட பலவித மனநிலைக்குப் பிறகு நான் ஜகன்மாதாவிடம், ''அம்மா, இந்த மனநிலைகளிலெல்லாம் பிரிவு இருக்கிறது. எந்த மனநிலையில் பிரிவு என்பதே இருக்காதோ, அந்த மனநிலையை எனக்குக் கொடு'' என்று முறையிட்டுக் கொண்டேன். அதனால்தான் அதன் பிறகு நான் அகண்ட சச்சிதானந்தத்தில் சில நாட்கள் ஆழ்ந்திருந்தேன். அப்போது என் அறையில் இருந்த தேவ தேவியர்களின் திருவுருவப் படங்களை அறையிலிருந்து அப்புறப்படுத்தி விட்டேன்.

எல்லா உயிர்களிலும் கடவுளையே நான் பார்க்கத் தொடங்கினேன். விதிமுறைகளுக்கு உட்பட்டுப் பூஜை செய்வது என்னிடமிருந்து நழுவியது. இதோ நீங்கள் பார்க்கும் இந்த வில்வ மரத்தில் நான் வில்வதளங்களைப் பறிக்கச் செல்வது வழக்கம். ஒரு நாள் வழக்கம்போல் நான் வில்வதளத்தைப் பறித்தபோது இலையுடன் கிளையும் சிறிது ஒடிந்து விட்டது. அப்போது அந்த மரம் சைதன்ய மயமாகவே இருப்பதைப் பார்த்தேன். அதைப் பார்த்ததும் கிளையை ஒடித்து விட்டோமே என்று என் மனம் பெரிதும் வேதனைப்பட்டது. ஒரு நாள்

அறுகம்புல் பறிக்கச் சென்றேன். என்னால் அதைச் செய்ய முடியவில்லை. பிறகு என்னை நானே கட்டாயப்படுத்திக் கொண்டு வலுவில் சிறிதளவு அறுகம்புல் பறித்தேன்.

என்னால் எலுமிச்சம்பழத்தை நறுக்க முடிவதில்லை. ஒரு நாள் எப்படியோ மிகவும் சிரமப்பட்டு 'ஜய் காளி! ஜய் காளி' என்று உச்சரித்துக் கொண்டே தேவியின் முன்னால் அதைப் பலியிடுவது போல வெட்டினேன்.

இன்னொரு நாள் பூப்பறிக்கச் சென்றிருந்தேன். மரத்தில் ஏராளமான பூக்கள் இருந்தன. அப்போது திடீரென்று ஸர்வவியாபகனான விராட்புருஷனை ஜகன்மாதா ஒரு ஞானக் காட்சியில் எனக்குக் காட்டியருளினாள். விராட்புருஷனான இறைவனுக்கு அப்போதுதான் பூஜை நடந்து முடிந்திருந்தது போல் எனக்குத் தோன்றியது. மரத்திலிருந்த பூக்கள் எல்லாம் விராட்மயமான விராட்புருஷனின் தலையிலும் கழுத்திலும் அணிவிக்கப் பெற்ற பூமாலைகள் போலத் தோன்றின. இந்த ஞானக் காட்சிக்குப் பிறகு என்னால் பூப்பறிக்க இயலவில்லை.

கடவுள்தான் மனிதனாகவும் லீலைபுரிகிறார். மனிதன் சாட்சாத் நாராயணனாகவே இருப்பதை நான் பார்க்கிறேன். கட்டையைத் தேய்க்கத் தேய்க்க எப்படி நெருப்பு வருகிறதோ, அதுபோல, பக்தியின் வேகம் தீவிரமாக இருக்குமானால் மனிதனிடத்திலேயே இறைவனைத் தரிசிக்கலாம். சரியான தூண்டில் இருக்குமானால் பெரிய பெரிய மீன்கள் அதை உடனே கவ்விக்கொள்ளும்.

பக்தியால் பிரேமைப் பித்துநிலை ஏற்படும்போது எல்லா மனிதர்களிடமும் இறைவனைக் காணும்நிலை ஏற்படுகிறது. கோபியர் எல்லா உயிர்களிடமும் ஸ்ரீகிருஷ்ணனையே கண்டனர். அவர்கள் பிரபஞ்சம் முழுவதையும் ஸ்ரீகிருஷ்ணன் மயமாகப் பார்த்தனர். அந்த நிலையில் அவர்கள் தங்களையே ஸ்ரீகிருஷ்ணன் என்றனர். அப்போது அவர்கள் தெய்வீகப் பித்துப் பிடித்த நிலையில் இருந்தனர். மரங்களைப் பார்த்து அவர்கள், "இந்த ரிஷிகள் (மரங்கள்) ஸ்ரீகிருஷ்ணனின் தியானத்தில் ஆழ்ந்திருக்கிறார்கள்" என்று சொன்னார்கள். மேலும் அவர்கள் புல்தரையைப் பார்த்து, "ஸ்ரீகிருஷ்ணன் ஸ்பரிசித்த காரணத்தினால் பூமிக்கு மயிர்க்கூச்சம் ஏற்பட்டிருக்கிறது" என்றார்கள்.

ஒரு விக்கிரகத்தில் இறைவனின் சாந்நித்தியத்தை உணர வேண்டுமானால் மூன்று விஷயங்கள் தேவைப்படுகின்றன: முதலில், பூஜாரியின் பக்தி; இரண்டாவதுவிக்கிரகம் அழகு ததும்புவதாக இருக்க வேண்டும்; மூன்றாவது வீட்டு எஜமானின் பக்தி. 'ஒரு பக்தனின் மனம் கடைசியில், கடவுளின் மனிதலீலைகளில்தான் ஆழ்ந்து விடுகிறது' என்று வைஷ்ணவ சரண் ஒரு சமயம் குறிப்பிட்டார்.

ஆனால் ஒரு விஷயத்தை நீங்கள் நினைவில் கொள்ள வேண்டும்: இறைவனைத் தரிசிக்காத வரையில் கடவுள் மனிதனாக லீலைபுரிவதை ஒருவனால் காணமுடியாது. கடவுளை நேருக்கு நேராகத் தரிசித்த ஒருவனுக்கு என்ன அறிகுறி தெரியுமா? அவனுக்கு ஒருகுழந்தையின் இயல்பு உண்டாகிறது. ஏன் அவ்விதம் ஏற்படுகிறது? அதற்குக் காரணம், கடவுள் குழந்தையின் சுபாவம் கொண்டவர். ஆகவேதான் கடவுளை எவன் தரிசிக்கிறானோ அவனும் குழந்தையின் சுபாவம் பெறுகிறான்.

கடவுளின் தரிசனம் பெற்றே ஆகவேண்டும். இப்போது கடவுளின் தரிசனம் எப்படி ஏற்படும் என்பதுதான் பிரச்னை. 'என்ன, நீ உலகத்திற்குத் தந்தையா? நான் என்ன, உலகத்திற்கு அப்பாற்பட்டவனா? நீ என்மீது கருணை காட்டமாட்டாயா, என்ன?' என்று சொல்லும் தீவிர அருள்தாகம் ஒருவனிடம் இருக்க வேண்டும்.

**பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரின் 145-ஆவது ஜயந்தி, 1980 பிப்ரவரி 18-ஆம் நாள் திங்கட்கிழமை வழக்கம்போல் விமரிசையாகச் சென்னை ஸ்ரீராமகிருஷ்ண மடத்தில் நடைபெறும்.**






## காசியில் விவேகானந்தர்

தமிழ்நாட்டில் தோன்றிய மகானாகிய ஸ்ரீகுமர குருபரர் காசிக்குச் சென்று அங்கு ஒரு மடம் நிறுவினார். அவரே காசியிலுள்ள ஸ்ரீ கேதார் நாத் கோவில் என்ற ஸ்ரீ கேதாரேச்வரர் கோவிலைப் புதுப்பித்து விரிவுபடுத்தினார். ஸ்ரீகுமர குருபரர் நிறுவிய மடம் 'ஸ்ரீகுமாரசுவாமி மடம்' என்ற பெயரில் இயங்கி வருகிறது. அந்த மடத்தினர் பொறுப்பில் ஸ்ரீகேதாரேச்வரர் கோவிலின் நிர்வாகம் இருந்து வருகிறது. குமாரசுவாமி மடமும் ஸ்ரீகேதாரேச்வரர் கோவிலும் காசியில் 'கேதாரகட்டம்' என்ற பகுதியில் அருகருகே இருக்கின்றன. காசி குமாரசுவாமி மடத்தின் ஆறுவது பட்டமான ஸ்ரீலஸ்ரீ காசிவாசித் தில்லைநாயக சுவாமிகள் தமிழ்நாட்டிலுள்ள திருப்பனந்தாளில் ஒரு கிளை மடம் நிறுவினார்.

* * *

**1902**-ஆம் ஆண்டின் ஆரம்பத்தில் சுவாமி விவேகானந்தர் நான்காம் முறையாகக் காசிக்குச் சென்றிருந்தார். அப்போது ஒரு நாள் சுவாமிஜியைத் தரிசிக்க அவர் தங்கியிருந்த இடத்திற்குச் சுமார் எண்பது வயது மதிக்கத்தக்க ஒரு சன்னியாசி வந்திருந்தார். அவர் காசியிலுள்ள ஸ்ரீகேதார்நாத் கோவிலுக்கும் குமாரசுவாமி மடத்திற்கும் தலைவராக இருந்தார். அந்தச் சன்னியாசிக்கும் சுவாமிஜிக்கும் நடைபெற்ற உரையாடல்களை உள்ளத்தைத் தொடும் வகையில் சுவாமி சதாசிவானந்தர் தமது நூலில் விரிவாகக் குறிப்பிட்டுள்ளார்.

தென்னிந்தியராகிய அந்த சன்னியாசி சுவாமிஜியிடம், ''சுவாமிஜி, தாங்கள் சிவபெருமானின் அவதாரம். மனிதகுலம் உய்வு பெறுவதற்காகவே தாங்கள் அவதரித்திருக்கிறீர்கள். தாங்கள் ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் ஆற்றியுள்ள ஆன்மிகப் பணி வரலாற்றில் ஒரு முக்கிய நிகழ்ச்சியாகும். மேலைநாட்டு மக்களின் முன்பு இந்தியாவின் ஆன்மிகச் சிறப்பைத் தாங்கள் நிலைநிறுத்தியதைக் கண்டு, ஒவ்வொரு சன்னியாசியும் ஒவ்வொரு ஹிந்துவும் தாமே பெருமைப்படுத்தப்பட்டதாக மகிழ்ச்சி கொண்டிருக்கிறார்கள்'' என்று பலவாறு புகழ்ந்து பேசினார்.

அந்த முதியவர் தம்மைப் புகழ்ந்து பேசுவதைத் தடுத்து, சுவாமிஜி கூறியதாவது: ''அதிகமாக நான் ஒன்றும் செய்துவிடவில்லை. நான் செய்ததாகக் கருதப்படும் சிறிதளவு ஆன்மிகப் பணி இறைவனின் திருவருளால் நடைபெற்றதே ஆகும். இறைவனின் சங்கல்பத்தின்படி நடைபெற்ற அந்தப் பணிக்கு உரிய பெருமை இறைவனுக்கே உரியதேயன்றி, எனக்கும் அதற்கும் அணுவளவும் சம்பந்தமில்லை. இந்த என் உடல் இறைவனின் கருவியாக விளங்கியது; அவ்வளவுதான். பூரணத்துவம் எய்தியிருந்த பண்டைய ஞானிகளின் பிரதிநிதியே போன்று ஞானியாகிய தாங்கள் தெய்விக வாழ்க்கை வாழ்ந்து வருகிறீர்கள். தங்களைப் போன்று ஞானம் எய்திய மகான்கள் என்னை ஆசீர்வதித்தால், இதுவரையில் செய்ததைவிடப் பல மடங்கு மகத்தான காரியங்களையும் மிகவும் சுலபமாக என்னால் செய்துவிட முடியும். ஞானியாகவும் ஸ்ரீகேதாரநாத் கோவிலின் தலைவராகவும் இருக்கும் தாங்கள்தாம் சிவபெருமானின் அவதாரமாக இருக்கிறீர்கள். நான் சாதாரண அற்ப மனிதன்'' என்று அந்த முதியவரின் முன்பு, சுவாமிஜி ஒரு சிறிய பையனைப் போலப் பணிவுடன் கூறினார்.

அந்த முதியவர் சுவாமிஜியிடம் மேலும் கூறியதாவது: ''தாங்கள் மேலைநாட்டுச் சுற்றுப் பய

ணம் முடிந்து இராமேஸ்வரம் திரும்பினீர்கள். அப்போது அங்குள்ள எங்கள் மடத்தில் தங்களை வரவேற்று உபசரிக்க விரும்பினர்கள். தங்களை எங்கள் மடத்திற்கு அழைத்துப் போவதற்காக ஒரு பல்லக்கும் தங்களுக்கு அனுப்பியிருந்தார்கள். எங்கள் மடத்திலிருந்து சில சன்னியாசிகளும் தங்களைச் சந்தித்து மடத்திற்கு வருகை தரும்படி கோரினர்கள். ஆனால் அப்போது தங்களைத் தரிசிப்பதற்கு மக்கள் சமுத்திரம் போன்று திரண்டு வந்திருந்ததனைலும், தாங்கள் மிகவும் களைத்திருந்ததனுலும் எங்கள் மடத்தினரின் வேண்டுகோளைத் தங்களால் ஏற்று ஆங்கிகரிக்க இயலாமற் போய்விட்டது. எனினும்



தங்களை அழைத்து வந்து உபசரிக்க இயலாமற் போனது குறித்து எங்கள் மடத்தைச் சேர்ந்த சன்னியாசிகள் பெரிதும் மனம் வருந்தினர்கள். அந்தக் குறையை நீக்கும் வகையில், தாங்கள் காசிக்கு வந்திருப்பதை அறிந்து இப்போது அவர்கள் எனக்கு ஒரு தந்தி கொடுத்திருக்கிறர்கள். அதில் அவர்கள் தங்களிடம் ஒரு வேண்டுகோளைத் தெரிவிக்கும்படி என்னைக் கோரியுள்ளனர். அந்த வேண்டுகோள் இதுதான்: இங்கே காசியிலுள்ள எங்கள் கோவிலுக்கும் மடத்திற்கும் தாங்கள் வருகை புரிய வேண்டும். அத்துடன் தாங்களும் தங்களைச் சேர்ந்தவர்கள் அனைவரும் குறைந்த பட்சம் ஒரே ஒரு நாளாவது எங்கள் மடத்தில் பிக்ஷை ஏற்றுக்கொள்ள வேண்டும்.''

பூஜித்தற்குரிய அந்த முதியவர் இவ்விதம் பணிவுடன் வேண்டுகோள் விடுத்ததைக் கேட்டதும் சுவாமிஜியின் உள்ளம் கரைந்தது.

அந்த முதியவரின் முன்னுல் சுவாமிஜி ஒரு சிறிய பையனுகவே மாறி மிக்க பணிவுடன், ''தாங்கள் இவ்வளவு தூரம் சிரமம் மேற்கொண்டிருக்கத் தேவையில்லை. தாங்கள் 'வா' என்று ஒரு வார்த்தை சொல்லியிருந்தால் போதும்; அல்லது தாங்கள் நேரில் வராமல் யாரிடமாவது சொல்லி விட்டிருந்தாலும் நான் வந்திருப்பேன். எப்படியோ நாளைய தினம் நிச்சயமாக வருகிறேன்'' என்று தெரிவித்துக் கொண்டார்.

மறுநாள் காலை பத்து அல்லது பதினெரு மணிக்கு, சுவாமிஜி, சிவானந்தர் உள்படச் சிலருடன் அந்த முதியவர் தலைவராக இருந்த குமாரசுவாமி மடத்திற்குச் சென்ருர். அந்த முதிய சன்னியாசி அனைவரையும் வரவேற்றுப் பெரிய விருந்து வைத்தார்.

நண்பகல் வேளையில் அந்த முதியவர் சுவாமிஜியைப் பக்கத்திலிருந்த ஓர் அறைக்கு அழைத்துச் சென்ருர். அங்கு ஸ்ரீகாசி மடத்தின் தலைவர்களாக முன்பு இருந்த பெரியவர்களின் படங்கள் வைக்கப்பட்டிருந்தன. அந்தப் படங்களில் உள்ளவர்களின் பெயர்களையும் அவர்களைப் பற்றியும் முதியவர் சுவாமிஜிக்குக் கூறினர்.

பின்பு முதியவர் ஒரு காவித்துணியை சுவாமிஜியின் இடுப்பில் கட்டிவிட்டு, மற்ருெரு காவித்துணியை அவருக்குப் போர்த்தியும் விட்டார். முதியவர் மிக்க மகிழ்ச்சியுடன், ''இன்றையதினம் உண்மையான ஒரு தண்டி (வேதாந்தி) சன்னியாசிக்கு உணவிட்டேன்'' என்று குறிப்பிட்டார்.

பின்பு அந்த முதியவர் சுவாமிஜியையும் மற்றவர்களையும் ஸ்ரீகேதாரநாத் கோவிலுக்கு அழைத்துச் சென்ருர். கோவிலில் ஸ்ரீகேதாரநாதரின் பூஜை வேளை முடிந்திருந்தது. எனினும் வழக்கத்துக்கு மாருக, சுவாமிஜியின் வருகையை முன்னிட்டு அந்த வேளையில் ஸ்ரீகேதாரநாதருக்கு விசேஷ ஆரதி நடைபெற்றது.

சுவாமிஜியும் மற்றவர்களும் அந்த முதியவரிடம் விடைபெற்றுக்கொண்டு ஒரு வண்டியில் புறப்பட்டனர். தமிழ்நாட்டைச் சேர்ந்த நாட்டுக்கோட்டை நகரத்தார் சத்திரம் வழியாக வண்டி சென்றது. சத்திரத்தைக் கண்டதும் சுவாமிஜி ஒரு சிறு பையனைப் போல மகிழ்ச்சியுடன். 'நாட்கோட் செட்டி' என்று அரைகுறைத் தமிழில் கூவினர். வண்டி சுவாமிஜி தங்கியிருந்த காளி கிருஷ்ண தாகூரின் வீட்டை அடைந்தது.

*   *   *

இந்தக் கட்டுரையை எழுதிக் கொண்டிருந்த போது சில தகவல்கள் கேட்டு காசியிலுள்ள குமார

சுவாமி மடத்தின் ஏஜண்ட் வி. கல்யாணசுந்தரம் அவர்களுக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தோம். அதற்கு அவர் எழுதிய பதிலில், ''ஸ்ரீகேதாரநாத் கோவில் என்பது ஸ்ரீகேதாரேசுவரர் கோவிலைத் தான் குறிப்பிடுகிறது. இங்கு காசியில் வேறு கேதார நாதர் கோவில் இல்லை'' என்று பதில் எழுதியிருந் தார்.

விஜயம் காரியாலயத்திலிருந்து எழுதப்பட்டிருந்த கடிதத்தை திரு வி. கல்யாணசுந்தரம் அவர்கள் திருப்பனந்தாளிலுள்ள ஸ்ரீகாசி மடத்திற்கு அனுப்பி யிருந்தார். எனவே திருப்பனந்தாளிலிருந்து ஸ்ரீமடத் தின் அதிபராக உள்ள ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக் குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்களின் சார்பாக மேலும் சில தகவல்களை அனுப்பியிருந் தார்கள். அவை வருமாறு:

1. சுவாமி விவேகானந்தர் சிகாகோ விஜயம் முடிந்து 1897-ஆம் ஆண்டு இராமேசுவரம் வந்த போதே காசி மடத்தின் கிளை இராமேசுவரத்தில் இருந்தது.

2. 1902-இல் சுவாமி விவேகானந்தர் காசிக்குச் சென்றிருந்தபோது, திருப்பனந்தாள் ஸ்ரீகாசி மடத் தின் பட்டத்தில் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சோமசுந்தர சுவாமிகள் அவர்கள் இருந்தார்கள். அப்போது வாரணாசியில் கட்டளைத் தம்பிரானாக சுப்பிரமணிய தம்பிரான் அவர்கள் இருந்தார்கள்.

3. வாரணாசியில் சுவாமி விவேகானந்தருக்கு நல்வரவேற்பு கொடுத்ததாக இக் கட்டுரையில் குறிப்பிடப்படும் வயது முதிர்ந்த துறவியார் காசி மடத்தின் தலைவரல்லர். அவர் காசித் திருமடத்தின் ஆணைக்குட்பட்ட ஒரு பிரதிநிதியே ஆவார். அது, ''எங்கள் திருமடத்திலிருந்து ஒரு தந்தி அனுப்பியுள் ளார்கள்'' என்பதால் அறியலாம்.

4. வாரணாசியில் சுவாமி விவேகானந்தரை வர வேற்று உபசரித்தவர் சுப்பிரமணிய தம்பிரான் அவர்களாக இருக்கக்கூடும். 1902-ஆம் ஆண்டில் சுப்பிரமணிய தம்பிரானுக்கு என்ன வயது இருந்தி ருக்கும் என்பதும் அவர் மகான் நிலையில் மதிக்கப் பட்டாரா என்பதற்கும் போதிய ஆதாரங்கள் இப் போது கிடைக்கப் பெறவில்லை.

5. காசியிலுள்ள குமாரசுவாமி மடத்தில் ஸ்ரீகுமர குருபரரின் வாழ்க்கை நிகழ்ச்சிகள் வண்ணப்படங் களாகத் தீட்டப்பெற்றது, ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களின் காலத்தில் 1945-க்குப் பிறகுதான் என்பது திண் ணம்.

எனவே சுவாமி விவேகானந்தர் கண்ட காசி மடத்தின் தலைவர்களின் படங்கள், தற்போது அங்குள்ள குமரகுருபரரின் வண்ணப் படங்களாக இருப்பதற்கு வாய்ப்பில்லை. அவர் கண்டது. அந் நாளில் குமாரசுவாமி மடத்தில் வைக்கப்பட்டிருந்த வேறு படங்களாக இருந்திருக்க வேண்டும் என்றே ஊகிக்க வேண்டியிருக்கிறது. ○

## சுணங்கன் கதி பெற்றது

சிவத்துரோகி ஒருவன் பல வகையானஇழிந்த பிறவிகளை எடுத்து முடிவிலே நாய்ப் பிறவியை எடுத்தான். அந்த நாய் பல இடங்களிலே அலைந்து திரிந்து திருவிடைமருதூரை அடைந்தது. தளர்வுற்று, சிவயோகி உறையும் மடத்தில் களைப்பு மிகுதியால் படுத்திருந் தது. அது சிவயோகியின் எச்சிலை உண்டு வந்தது.

நாய் இறந்ததும், அது சிவயோகியின் எச்சிலை உண்டு வந்த புண்ணியவசத்தினுல் காசி மன்னன் மகளாகப் பிறந்தது. அந்தப் பெண்ணைச் சோழமன்னன் திருமணம் செய்து கொண்டான். சோழன் மனைவி சில நாள் கழித்துத் திருவிடைமருதூர் இறைவனை வழிபட்டுவர எண்ணம் கொண்டாள். சிவயோகியின் மடத்தை அடைந்தாள். அவர் உண்மை உணர்ந்து இறைவனிடம் பிரார்த்தனை செய்தார். இறைவனும் தமது பேரொளி யில் அந்தச் சிவயோகியையும் பெண்ணையும், அவர்களின் வாழ்க்கை முடிவு பெற்றபோது சேர்த்துக்கொண்டார். அடியார் அதாவது ஆத்மஞானிகளின் எச்சிலின் சிறப்பு இதனுல் விளங்கும்.

—திருவிடைமருதூர்த்தல புராணம்



# சிவராத்திரி விரதச் சிறப்பு

ந. ரா. முருகவேள், எம். ஏ., எம். ஓ. எல்.

சிவராத்திரி—1. யோக சிவராத்திரி, 2. நித்திய சிவராத்திரி, 3. மாத சிவராத்திரி, 4. முக்கோடி சிவராத்திரி, 5. பட்ச சிவராத்திரி என்று ஐந்து வகைப்படும்.

### 1. யோக சிவராத்திரி

யோக சிவராத்திரி என்பது சோமவார தினத்தில் (திங்கட்கிழமையில்) சூரியோதய வேளை தொடங்கி அன்றிரவு முடியும் வரை அமாவாசை வரையில் பொருந்தியிருப்பதாகும். அமர பட்சத்துச் சதுர்த்தசி, திங்கட்கிழமை இரவு நான்கு சாமங்களிலும் தொடர்ந்திருப்பினும், அல்லது இரவின் நான்காம் சாமத்திற்குப் பின் அரை நாழிகையளவு அமாவாசை பொருந்தியிருப்பினும் அமரபட்சத்துச் சதுர்த்தசி நான்காம் சாமத்தின் முன் அரை நாழிகை வந்து கூடினாலும், யோக சிவராத்திரி என்று கூறப்படும்.

### 2. நித்திய சிவராத்திரி

ஓர் ஆண்டின், இளவேனில் முதுவேனில் கார் குளிர் முன்பனி பின்பனி என்னும் ஆறு பருவங்களைக் கொண்ட பன்னிரண்டு மாதங்களிலும் சந்திரன் தேய்ந்தும் வளர்ந்தும் வருவான். வளர்வது பூர்வ (சுக்கில) பட்சம் என்றும், தேய்வது அபர (கிருஷ்ண) பட்சம் என்றும் சொல்வது மரபு. பன்னிரண்டு மாதங்களிலும் இவ்விதம் வருகிற பூர்வ அபர பட்சத்துச் சதுர்த்தசியாக 24 தினங்களிலும் வருவது நித்திய சிவராத்திரி.

### 3. மாத சிவராத்திரி

மாசி மாதத்தில் அபரபட்சத்துச் சதுர்த்தசியும், பங்குனி மாதத்தில் பூர்வ பட்சத் திருதீயையும், சித்திரை மாதத்தில் அபரபட்சத்து அட்டமியும், வைகாசி மாதத்தில் பூர்வபட்சத்து அட்டமியும், ஆனி மாதத்தில் பூர்வபட்சத்துச் சதுர்த்தசியும், ஆடி மாதத்தில் அபரபட்சத்துப் பஞ்சமியும், ஆவணி மாதத்தில் பூர்வபட்சத்து அட்டமியும், புரட்டாசியில் பூர்வபட்சத் திரயோதசியும், ஐப்பசியில் பூர்வபட்சத் துவாதசியும், கார்த்திகை மாதத்தில் பூர்வபட்ச சப்தமியும், அபரபட்ச அட்டமியும், மார்கழி மாதத்தில் பூர்வ அபரபட்சங்கள் இரண்டிலும் உள்ள சதுர்த்தசியும், தை மாதத்தில் பூர்வபட்சத் திருதீயையும் ஆகிய நாட்கள், சிவபெருமானை அருச்சனை செய்து வழிபடுவதற்கு உரிய நாள்களாகும். இவை மாத சிவராத்திரி எனப்படும்.

### 4. முக்கோடி சிவராத்திரி

மார்கழி மாதத்துச் சதுர்த்தசி திதியானது, திருவாதிரை நட்சத்திரத்துடன் கூடி வந்தால் அது மிகவும் உத்தமமாகும். மாசி மாதத்தில் அபர பட்சத்துச் சதுர்த்தசி செவ்வாய்க் கிழமையிலேனும் ஞாயிற்றுக் கிழமையிலேனும் பொருந்தி வந்தால் அது முக்கோடி சிவராத்திரி எனப்படும்.

இவ்வாறு பன்னிரண்டு மாதத்திலும் வருகிற மாத சிவராத்திரிகளில், மாசியில் பிரம்மதேவனும், பங்குனியில் திருமாலும், சித்திரையில் பார்வதிதேவியும், வைகாசியில் சூரியனும், ஆனியில் ருத்திரனும், ஆடியில் முருகப் பெருமானும், ஆவணியில் சந்திரனும், புரட்டாசியில் ஆதிசேஷனும், ஐப்பசியில் இந்திரனும், கார்த்திகையில் சரசுவதியும், மார்கழியில் மனோன்மணியும், தை மாதத்தில் நந்திதேவரும் சிவபெருமானைப் பூசித்து அருள் பெற்றனர்.

### 5. பட்ச சிவராத்திரி

தை மாதத்து அபரபட்சத்துப் பிரதமை திதி தொடங்கிப் பதின்மூன்று தினங்களிலும் ஒரு வேளை மட்டும் உண்டு, பதினான்காம் திதியாகிய சதுர்த்தசி தினத்தில் உபவாசம் செய்வது பட்ச சிவராத்திரியாகும்.

இவ்வாறு ஐந்து வகைப்படும் சிவராத்திரிகளை அன்புடன் கடைப்பிடிப்பது சிறப்புடையதாகும். ஐந்தும் இயலா விட்டால் இவற்றில் ஒன்றையேனும் அன்புடன் கடைப்பிடித்து ஒழுகினால், எல்லா நலங்களும் வரங்களும் பெறலாம்.

### சிவராத்திரி விரதம்

சிவராத்திரி விரதம், உத்தமம் மத்திமம் அதமம் என்று மூன்று வகைப்படும். சூரியன் மேற்குத் திசையில் மறைந்து அந்திக்காலம் வரும் வரையில் திரயோதசி திதி இருந்து, பின்பு சதுர்த்தசி திதி கூடப்பெற்று, அது இரவில் மட்டுமின்றி மறுநாள் பகல் முழுவதும் இருந்தால், அது உத்தம சிவராத்திரி என்று கூறப்படும்.

தோன்றிய சூரியன் மறைந்தபிறகு கூடுகிற சதுர்த்தசி, உத்தம சிவராத்திரியாகும். ஒரு நாள் சூரியோதயம் தொடங்கி மறுநாள் சூரியோதயம் ஆகும் வரையிலுள்ள பகலும் இரவும் சேர்ந்து நிற்கிற சதுர்த்தசியும், சூரியன் மறையும் முன்பு கூடுகிற சதுர்த்தசியும், இரவில் பத்து நாழிகைக்கு மேல் வருகிற சதுர்த்தசியும் மத்திம சிவராத்திரியாகும்.

இரவில் இருபது நாழிகை வரையும் சதுர்த்தசி இருந்து, அதற்கு மேல் அமாவாசை திதி தொடங்கிச் சதுர்த்தசியோடு பொருந்துமாயின், அதம சிவராத்திரியாகும். ஆதலின் இரவு முழுதிலும் உள்ள திரயோதசி திதியோடு பொருந்தும் சதுர்த்தசி திதியே நல்லதாகும். இரவில் திரயோதசியோடு ஒரு சிறிதேனும் சதுர்த்தசி சேர்ந்து வந்தால், அதுவே சிவராத்திரியாகக் கொள்ளப்படுதல் வேண்டும். சதுர்த்தசி திதி சிவ வடிவமும், திரயோதசி திதி சக்தி வடிவமுமாகும். இந்த இரண்டு திதிகளும் சேர்ந்து வருகிற இரவு சிவலிங்க வடிவம் உடையது என்று பெரியோர் கூறுவர்.

அமாவாசை நள்ளிரவில் நீண்டி நிற்கும் சதுர்த்தசி, உயிர் நீங்கிய உடலுக்குச் சமமாகும். ஆகவே அப்போது சிவபூசை செய்தல் கூடாது. அமாவாசையோடு கூடிய சதுர்த்தசி அந்தணர்களுக்கும் துறவிகளுக்கும் உரிய விரதநாளாகும். ஆகமத்தைப் பின்பற்றும் சைவர்கள் அதற்கு முதல் நாளிலேயே விரதம் அனுஷ்டிக்க வேண்டும்.

திருவோண நட்சத்திரத்தோடு சேர்ந்து வரும் அமாவாசையுடன் கூடிய சதுத்தசி, துறவறத்தாருக்கும் இல்லறத்தாருக்கும் உரியதாகும். திருவோண நட்சத்திரத்துடன் கூடி வருவதனுல் சதுர்த்தசி, அமாவாசையைத் தீண்டி வந்தாலும், அதற்குக் குற்றம் இல்லை.

சதுர்த்தசி திதி நடு இரவில் ஒரு கலையளவு கூடி நின்ருல் அந்தத் தினத்தில் விரதம் அனுஷ்டிக்கலாம். நடு இரவிற்குப் பிறகு சதுர்த்தசி திதி ஒரு கலையளவு எஞ்சி நின்ருல், வைதிகரும் துறவிகளும் மறுநாளில் விரதத்தைக் கடைப் பிடித்தல் வேண்டும். சதுர்த்தசி திதி இரண்டு நள்ளிரவுகளில் பொருந்தி இரண்டு பட்டுவருமாயின் சதுர்த்தசி திதி இரவில் அதிகமாக நீடித்து இருக்கும் தினமே, விரத தினமாகக் கொள்ளத்தக்கது.

திரயோதசியின் பிற்கூறும், சதுர்த்தசியின் முழுக் கூறும், அமாவாசையின் முற்கூறும் ஆகிய மூன்று திதிகளும் ஒரு நாளில் வருமாயின், அந்த நாள் வைதிகர்களுக்கும் சைவர்களுக்கும் சிறப்புடையதாகும்.

விரததினமாகக் கொள்ளப் பெற்ற தினத்தில் இரவின் முடிவில், அமாவாசை வந்து சேருமுன்புச் சிவபூசை செய்வது, ஆகமங்களைப் போற்றும் சைவர்களுக்கு நல்லதாகும். சோமவாரத்தில் வருகிற சதுர்த்தசிக்கும் இது பொருந்தும்.

சதுர்தசி இரவில் பதினைந்து நாழிகையளவு முதல் நாளில் கூடி, மறுநாள் இரவு பதினைந்து நாழிகையளவு வந்து அமாவாசை ஒன்று சேருமாயின், மறுதினத்தில் பூசை செய்வது நல்லதன்று. அதனுலேயே அதன் முதல் நாளில் சிவபூசை செய்யவேண்டும் என்று ஆகமங்கள் கூறுகின்றன.

## மகாசிவராத்திரி

**மா**சி மாதத்தில் வரும் மகாசிவராத்திரி விரதத்தை அனுஷ்டிக்க விரும்புபவர்கள் முன் திதியாகிய திரயோதசி நாளில் ஒரு பொழுது மாத்திரம் உணவு உட்கொண்டு, இடையில் வரும் சதுர்த்தசிதிதியில் பட்டினியிருந்தும் கண் விழித்தும், நான்கு சாமங்களிலும் சிவபூசை செய்து, அடுத்துவரும் திதியாகிய அமாவாசையில் சிவனடியார்களுக்கு அமுது செய்வித்தல் வேண்டும்.

திங்கட்கிழமையில் வருகிற யோக சிவராத்திரிக்குச் சதுர்த்தசி திதியில் ஒருவேளை மட்டும் உணவு கொண்டு அமாவாசையில் நான்கு சாமங்களிலும் பூசைசெய்து அடுத்து வரும் பிரதமையில் பாரணம் செய்தல் வேண்டும். முற்கூறிய 1. மகாசிவராத்திரி, 2. யோகசிவராத்திரி, 3. நித்தியசிவராத்திரி, 4. மாத சிவராத்திரி, 5. பட்சசிவராத்திரி என்னும் ஐந்து சிவராத்திரிகளில், சதுர்த்தசிதிதியே சிவராத்திரி நாளாகக் கொண்டாடப்பெறுகிறது.

சிவராத்திரி விரதத்தை அனுஷ்டிப்பவர்கள் அதன் முதல்நாள் ஆகிய திரயோதசிதிதியில் ஒருவேளை உணவு கொண்டு, பிரம்மசரிய விரதம் காத்து, திரயோதசி இரவைக் கழித்து, அதன் விடியற்காலையில் புண்ணிய தீர்த்தங்களில் நீராடி சூரியோதய காலத்திற்குள் நாட்கடமைகளையெல்லாம் செய்து முடித்து, சிவாலயம் சென்று, வலம் வந்து, தரையில் வீழ்ந்து பணிந்து, வாயினுல் துதிப்பாடல்களைப் பாடித்தொழுது, பின்வீட்டிற்குச் சென்று நீராடி, தூயநல்லாடை தரித்து நண்பகற் கடமைகள் முடித்துக்கொண்டு, பூசைசெய்யும் இடத்தை கோமயத்தால் மெழுகிக் கோலமிட்டு, வாழைக் கரும்பு முதலியவற்றை நட்டு, பூமாலைகளும் தோரணங்களும் கட்டி, சிவபூசைக்கு உரிய பொருள்களைத் தூயனவாகத் தொகுத்து, சூரியன் மறையும் வேளையில் சிவாலயம் சென்று, சந்தனம் தூபதீபம் முதலிய பொருள்களைக் கொடுத்து, சாயங்காலத்தில் அர்க்கியம் முதலிய கிரியைகளையும், மந்திரஜபம், தியானம் முதலியவற்றையும் முடித்துப் பிறகு சிவபூசை செய்யத் தொடங்குதல் வேண்டும்.

### பூசை முறை

முதல் சாமத்தில் பஞ்ச கவ்யத்தினாலும், இரண்டாம் சாமத்தில் பஞ்சாமிர்தத்தினாலும், மூன்றும் சாமத்தில் கருப்பஞ்சாற்றினாலும் சிவலிங்கத்திற்கு அபிஷேகம் செய்தல் வேண்டுமென்று காரணாகமம் கூறுகிறது. கோசலம், கோமயம், தயிர், பால், நெய் ஆகிய ஐந்தும் பஞ்சகவ்யம் எனப்படும். தேன், தயிர், பால், நெய், சக்கரை ஆகிய ஐந்தும் பஞ்சாமிர்தம் எனப்படும்.

முதல் சாமத்தில் சந்தனம், இரண்டாம் சாமத்தில் அகிலஞ்சனம், மூன்றும் சாமத்தில் பச்சைக் கர்ப்பூரம், நான்காம் சாமத்தில் நறுமணம் வாய்ந்த குங்குமம் ஆகியவற்றைச் சிவலிங்கத்திற்கு அன்புடன் சாத்துதல் வேண்டும்.

முதல் சாமத்தில் வில்வதளம், இரண்டாம் சாமத்தில் தாமரைமலர், மூன்றும் சாமத்தில் சிறு சண்பகப் பூ, நான்காம் சாமத்தில் நந்தியாவர்த்தம் பூ ஆகியவற்றைச் சிவராத்திரி நாளில் சிவபிரானுக்குச் சூட்டுதல் வேண்டும் என்று சித்ததந்திரம் என்னும் ஆகமம் கூறுகிறது.

வில்வம், நொச்சி, மாவிலங்கை, முட்கிளுவை, விளா ஆகிய ஐந்தையும் பஞ்சவில்வம் என்று பெரியோர் கூறுவர். இவற்றின் தழைகளில் மூவிதழ் கொண்ட பத்திரங்களைக் கொண்டு நான்கு சாமங்களிலும் சிவபூசை செய்தல் வேண்டும் என்று காரணாகமம் கூறுகிறது.

அவ்விதம் நிவேதனம் செய்யும்போது, சர்வன், உக்கிரன், சங்கரன், சிவன், சாம்பவன், ஈசானன், மகாஉக்கிரன், பூதாதிபதி என்னும் எட்டு மந்திரங்களையும் உச்சரித்து, தூபதீபம் முதலிய அனைத்து உபசாரங்களையும் மனம் ஒருமித்துச் செய்யவேண்டும். சிவராத்திரியில் உணவை ஒழித்தும், உறக்கத்தை நீக்கியும், நான்கு சாமங்களிலும் முறைப்படி பூசித்து, அர்க்கிய ஜலத்தினால் உபசரித்து, பூசையை ஏற்றுக்கொண்டு அருளும்படி, சிவபிரான் திருமுன்பு தண்டனிட்டு வீழ்ந்து துதித்தல் வேண்டும். பொழுது விடிந்ததும் வைகறைப்பொழுதில் நல்ல ஆறு குளம் போன்ற புண்ணிய தீர்த்தங்களில் நீராடி, காலைக்கடன்களை முடித்து, முற்கூறியபடியே அன்றும் பகல்வேளைகளில் சிவபூசை செய்து, தீட்சாகுருவை வணங்கி, சிவனடியார்களுக்குத் திருவமுது முதலியன வழங்கிப் பின்னர்ப் பாரணம் செய்ய வேண்டும். கீழ்த்திசையில் சூரியன் வந்து தோன்றிய ஆறு நாழிகைக்குள் பாரணம் செய்தால், சிறந்த நல்ல பலன்களை எய்தலாம்.

### சிவராத்திரி விரதச் சிறப்பு

இவ்விதம் சிவராத்ரி விரதம் கடைப்பிடிப்பவர்கள், மேலான சிவபதவியை அடைவார்கள்.

''மூவேழ் சுற்றம் முரணுறு நரகிடை
ஆழாமே அருள் அரசே போற்றி''

என்று மாணிக்கவாசகர் பாடுவது போல, இவர்கள் மட்டுமேயன்றி, சிவராத்திரி விரதம் கடைப்பிடித்தவர்களின் உறவினர்களாக இருபத்தொரு தலைமுறையில் உள்ளவர்களும் சிவபிரான் அருளால் விடுபேறு அடைவார்கள்.

சிவராத்திரியில் சிவபூசை செய்யும்போது நான்கு சாமங்களின் முறையே நான்கு வேதங்களையும் ஓதுதல் பெருநலம் பயக்கும். அவ்விதம் செய்ய இயலாதவர்கள் திருவைந்தெழுத்தை முறைப்படி ஓதினால், அது ஒன்றே அவர்களுக்கு எல்லா நலன்களையும் தந்துதவும். இவ்விதம் விவரிக்கப்பட்ட முறைகளில் சிவபூசை செய்ய இயலாத முதியவர்கள், பெண்கள், பிணியாளர் ஆகியோர் உணவு கொள்ளாமலும், உறக்கம் கொள்ளாமலும், நான்கு சாமங்களிலும் சிவபிரானின் திருவருட் பெருமைகளை விளக்கிக் கூறுகிற சிவபுராண நூல்களைக் கேட்டும், திருமுறைகள் ஓதியும், திருவைந்தெழுத்தை ஜபித்தும், தாம் தாம் வசிக்கும் இடங்களுக்கு அருகிலுள்ள சிவபிரான் திருக்கோயில்களுக்குச்சென்று வழிபடுதல் நலமாகும். சிவராத்ரி நாளில் முதல் சாமத்தில் சிவபூசை செய்து முடித்தவர்கள், தமக்கு மிகுந்த பசியும் களைப்பும் ஏற்பட்டால், சிறிதளவு நீராவது, பாலாவது, பழமாவது கொள்ளலாம். நீர் பருகுதல் உத்தமம். பால் பருகுதல் உத்தமம். பழம் உண்ணுதல் அதமம். அப்பம் தோசை பிட்டு முதலியன உண்ணல் அதமாதமம் ஆகும்.

சிவராத்திரி விரதத்தின் பயனைப் பெற விரும்பும் அன்பர்கள் அமாவாசை கூடும் முன்பே பாரணத்தைச் செய்து முடித்தல் வேண்டும். பாரணம் செய்து முடித்த நாளின் பிற்பகலைச் சிவபுராணம் கேட்டும், சிவசிந்தனையோடு இருந்தும் கழித்தல் வேண்டும். அன்று மாலைவேளையில் சந்தியாவந்தனம் முதலிய கடமைகளை முறைப்படி செய்து, அன்று மாலையும் உணவு கொள்ளாதிருத்தல் நல்லது. இவ்விதம் முறையாக இருபத்திநான்கு ஆண்டுகள் சிவராத்திரி விரதம் அனுஷ்டிப்போர், இம்மை மறுமை ஆகிய எல்லா நலங்களும், அவற்றிற்கும் மேலாகிய விடுபேறும் எளிதில் பெற்று இன்புறுவர்.

இந்தச் சிவராத்திரி விரதத்தின் சிறப்பைச் சிவ பெருமான் நந்திதேவருக்கு உபதேசித்தார். நந்தி தேவரிடமிருந்து சூரியன், முருகன், யமன், காமன், தேவர்கள், தேவேந்திரன், அக்கினித்தேவன், சந்திரன், குபேரன் முதலிய பலரும் சிவராத்திரி விரதத்தைக் கடைப்பிடித்துத் தாங்கள் தாங்கள் விரும்பிய நலன்களையெல்லாம் பெற்றுச் சிறப்புற்றார்கள்.

☆

# அவலம் உண்டோ?

வாகீசகலாநிதி கி. வா. ஜகந்நாதன்

சிவபெருமான் காலனை உதைத்த கால காலன். அவனை நம்பிப் பக்தி செய்வாருக்கு யமபயம் இல்லை. "நமனுர்க்கு இங்கேது கவை நாம் இருக்கும் இடத்தே" என்று கூறும் மிடுக்கு அவர்களுக்கு உண்டு. "நாமார்க்கும் குடி அல்லோம்; நமனை அஞ்சோம்" என்று பாடுவார் அப்பர் சுவாமிகள்.

இத்தகைய உறுதிப்பாட்டைக் காரைக்காலம்மை யாரும் பெற்றிருந்தார். அதை ஒரு பாட்டில் சொல்கிருர்.

சிவபெருமான் தன்னுடைய திருமுடியின்மேல் வளைந்த பிறையை அணிந்திருக்கிருன். அந்தச் சந்திரன் வளர்வதோ தளர்வதோ இன்றி, மாயாமல் என்றும் இறைவன் திருமுடிமேல் இருக்கிருன். வானத்தில் தோன்றும் மதிக்குத் தேய்வதும் வளர்வதும் உண்டு. இறைவனைச் சேர்ந்த திங்களுக்கோ அவை இல்லை. இறைவனைச் சேர்ந்தவர்கள் தளராமலும் மாயாமலும் இருப்பார்கள் என்பதை அந்தத் திங்களே காட்டுகிறது.

இறைவன் மூன்று கண்ணை உடையவன். இந்த அடையாளம் அவன் ஒருவனுக்குத்தான் உண்டு.

முடிமேல் கொடுமதியான், முக்கணுன்.

அவனுடைய அடி நல்ல அடி; நன்மையைத் தரும் அடி. நன்மையாவது பிறப்பாலும் இறப்பாலும் துன்பம் அடையாத நலம்.

"கற்றதனுல் ஆய பயனென்கொல், வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்"

என்ற குறளின் உரையில், 'பிறவிப் பிணிக்கு மருந்தாதலின் நற்றாள் என்ருர்' என்று விளக்கியுள்ளார் பரிமேலழகர். பிறவிப் பிணியும் இறப்பும் இரட்டையாக வரும். பிறவிப் பிணி உண்டானுல் இறப்பும் உண்டு. பிறவி இல்லையானுல் இறத்தலும் இல்லை. ஆகவே பிறப்பிறப்பை நீக்கும் திருவடியை இங்கே அம்மையார் 'நல்ல அடி' என்கிருர்.

முக்கணுன் நல்ல அடி.

'அந்த அடியை வணங்கி எம்முடைய தலைமேற் கொண்டோம். ஆதலால் இனி எமக்கு வாதனை இல்லை. எனவே, கூற்றுவனை நாம் மதிக்க மாட்டோம்' என்கிருர்.

நல்ல
அடிமேற்கொடு மதியோம் கூற்றை.

சிவபக்தர்கள் இறந்து விட்டால் கால தூதுவர்கள் வந்து அவர்களைக் கொண்டு செல்ல மாட்டார்கள்; சிவகணங்கள் அழைத்துச் சென்று சிவலோகத்திற் சேர்ப்பார்கள். மற்றவர்கள் மரணம் அடைவதற்கும் சிவபக்தர்கள் உயிர் பிரிவதற்கும் இதுதான் வேறுபாடு. மற்றவர்கள் உயிர் விட்டால் வேறு ஓர் உடம்பில் புகுவார்கள். ஒரு சிறையிலுள்ள குற்றவாளி வேறு ஓர் சிறைக்கு மாற்றப்படுவது போன்றது இது. பக்தர்கள் உயிர் விட்டால், சிறைத்தண்டனை நீங்கினவன் விடுதலை பெற்று வீட்டை அடைவதைப் போல, சிவலோகத்தை அடைவார்கள். அவர்களிடத்தில் காலனுக்கும் வேலை இல்லை; பிரமனுக்கும் வேலை இல்லை.

"சந்தமும் வேதமொழி யாதொன்று
பற்றினது தான்வந்து முற்றும் எனலால்
சகமீதிருந்தாலும் மரணம் உண்
டென்பதைச் சதா நிஷ்டர் நினைவதில்லை"

என்பது தாயுமானவர் பாடல்.

'இறைவனுடைய திருவடியைத் தலைமேற் கொண்டமையால் கூற்றுவனை ஒரு பொருளாக மதித்து அஞ்ச மாட்டோம்' என்று அம்மையார் சொல்கிருர்.

இனிமேல் கூற்றுவனுல் உண்டாகும் துன்பம் இல்லை என்ற உணர்வோடு, இங்கே வாழும் போதும் பெருமிதத்தோடு வாழும் நிலை அன்பர்களுக்கு உண்டாகிறது. "இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை" என்று அப்பர் சொல்வது போல இந்த உலகிலேயே துன்பமின்றி இன்பத்துடன் நல்லவண்ணம் வாழும் வாழ்க்கை உண்டாகிறது. இந்த உலகில் யாருக்கும் தலைதாழ்ந்து குனிய வேண்டிய நிலை அவர்களுக்கு இராது.

படிமேல்
குனிய அலம்

இறைவனுக்கு அடியார் என்பதிலே உண்டாகும் எக்களிப்பு வேறு எதனுலும் வராது. அவனுக்கு அடிமையான பண்பை யாவரும் கொண்டாடுவார் கள். ''பத்தராய்ப் பணிவார்கள் எல்லார்க்கும் அடியேன்'' என்று சுந்தரமூர்த்தி சுவாமிகளே சொல்லும்போது மற்றவர்கள் பாராட்டுவது என்ன அதிசயம்? 'எங்களிடத்தில் ஆகும் இந்த அடிமைத் தன்மையைப் பெரியவர்கள் கொண்டாடும் பேறு பெற்ருேம்' என்று பெருமிதத்தோடு சொல்கிருர் அம்மையார்.

ஆம் அடிமை கொண்டாடப் பெற்ருேம்.

வருங்காலத்தில் யமன் வருவானே என்று மிகப் பெரியவர்களும் அஞ்சும் அச்சம் இல்லை. நிகழ் காலத்திலோ எல்லோருக்கும் மேலவனுகிய சிவ பெருமானுக்கு அடியார்களான தன்மையால் யாருக்கும் தலை தாழ்ந்து குனிய வேண்டிய நிலையில் இல்லை. அரசர்க்கோ செல்வர்க்கோ அடிமைத் தன்மை கொண்டிருந்தால் அதைச் சான்ருேர் பழிப்பர். ஆனுல் சிவபெருமானுக்கு அடியார் களாகிய தன்மையைப் பெரியவர்கள் கொண்டாடு கிருர்கள். எனவே, வருங்காலத்திலும் துன்பம் இல்லை; நிகழ்காலத்திலும் அல்லல் இல்லை. என்றும் இன்பம் பெருகும் இயல்பே அமைந்திருக்கும் போது, இப்போது துன்பம் ஏது? அழுகை ஏது? அவலம் ஏது?

இனி அவலம் உண்டோ எமக்கு?

இறைவனுக்கு மீளா அடிமையாகி விட்ட பெரு மிதத்தாலே எந்த அச்சமும் துன்பமும் இல்லாத நிலை அன்பர்களுக்கு வாய்க்கிறது.

முடிமேற் கொடுமதியான்; முக்கணுன் நல்ல
அடிமேற் கொடுமதியோம் கூற்றை;–படிமேல்
குனியஅலம்; ஆம்அடிமை கொண்டாடப் பெற்ருேம்;
இனிஅவலம் உண்டோ எமக்கு.

[தன்னுடைய திருமுடியின் மேல் வளைந்த பிறையை அணிந்தவனும் மூன்று கண்ணை உடைய வனும் ஆகிய சிவபெருமானுடைய, பிறப்பிறப்பை நீக்கும் நல்ல அடியை வணங்கித் தலையின்மேற் கொண்டு அந்தப் பலத்தால் யமனை ஒரு பொருளாக மதிக்க மாட்டோம்; இந்த உலகத்தில் ஒருவரை வணங்குவதற்காக உள்ளோம் அல்லோம்; எங்க ளுக்கு ஆகிய அடியாரான தன்மையைப் பெரியோர் கள் கொண்டாடும் பேறு பெற்ருேம்; இப்போது எமக்கு ஏதேனும் துயரம் உண்டோ?

கொடுமதி-வளைந்த சந்திரன்; என்றது பிறையை. நல்ல-பிறப்பிறப்பை நீக்கும் நன்மையை உடைய. மேற்கொடு-வணங்கித் தலையின்மேற் சூடி. மதியோம்-ஒரு பொருளாகக் கருத மாட்டோம். கூற்றை-யமனை. படி-உலகம். குனிய அலம்-குனிவ தற்காக இருப்போம் அல்லோம்; தலைவணங்க மாட்டோம் என்றபடி. ஆம் அடிமை-எங்களிடத்தில் அமைந்த அடியாரென்னும் தன்மையை, கொண் டாட-பெரியோர் பாராட்ட. அடிமை கொண்டு ஆட- அடியாராம் தன்மையை மேற்கொண்டு களிக் கூத்தாட என்றும் பொருள் கொள்ளலாம். இனி- இப்போது; இனிமேல் என்பதும் பொருந்தும். அவலம்-துயரம்.

முக்கணுன் அடியை மேற்கொண்டு கூற்றை மதியோம்; படிமேல் குனிய அல்லம்; கொண்டாடப் பெற்ருேம்; அவலம் உண்டோ என்று கூட்டிப் பொருள் செய்க.]

இறைவனுக்கு அடியார்களானவர்களுக்கு இம்மையிலும் துன்பம் இல்லை; மறுமையிலும் துன்பம் இல்லை என்பது கருத்து.

அற்புதத் திருவந்தாதியில் 69-ஆவது பாடலாக உள்ளது இது. *

குணங்களையும் குற்றங்களையும் பற்றிய அடையாளங்களை வெகுவாகவிவரிப்பதில் என்ன பயன் ? குணதோஷங்களைப் பார்ப்பதே குற்றம். இரண்டையும் பாராமலிருப்பதே குணம்.

— பாகவதம்

தனக்கு நீர் கிடைக்கவில்லை; மற்றவர்களுக்குப் பால் தானம் செய்கிருன். தன் மனம் தைரியம் அடையவில்லை; மற்றவர்களுக்குத் தைரியம் ஊட்டுகிருன். உலகில் சொல் எல்லாம் சக்கைதான். செய்கை தான் சாரமானது. செய்கை வலுவுள்ளது. பிறவிக் கடலில் இறங்கிக் கரையேற்றும்.

—கபீர்




# கடமையுணர்வு தந்த பரிசு

எஸ். கோபால்

அவன் ஆடுகளை மேய்க்கும் ஒரு ஜெர்மானியச் சிறுவன். பச்சைக் கம்பளம் விரித்தாற் போன்று காட்சி தந்த புல்வெளியில் ஆங்காங்கே நின்று அவனது ஆடுகள் மேய்ந்து கொண்டிருந்தன. சிறுவனின் கண்ணும் கருத்தும் அவற்றின் மீதே நிலைத்திருந்தன.

வீரன் ஒருவனைத் தாங்கியபடி, குதிரை ஒன்று தன்னை நோக்கி மிகவும் வேகமாக வருவதைக் கவனித்தான் சிறுவன். அருகில் வந்து நின்ற குதிரையிலிருந்து இறங்கினான் அந்த வீரன். தோற்றத்தில் அந்த வீரன் வேட்டைக்காரனை ஒத்திருந்தான். எதையோ தெரிந்துகொள்ளும் ஆர்வம் அவன் முகத்தில் இருந்தது.

சிறுவன் கேள்விக் குறியுடன் அவனை நோக்கினான்.

''சிறுவனே, உன் பெயர் என்ன?'' என்று வினவினான் வீரன்.

''ஹான்சு.''

''அண்மையிலுள்ள கிராமத்திற்கு இங்கிருந்து எவ்வளவு தொலைவு?''

''ஆறு கல் தொலைவு, ஐயா'' என்ற சிறுவன் சற்று நிறுத்தினான். ''ஆனால் சரியான பாதை ஏதுமில்லை. ஒற்றையடிப் பாதை மட்டுமே இருக்கிறது. நீங்கள் கவனமாகச் செல்லாவிட்டால் வழி தவற நேரிடும்'' என்று கூறி எச்சரித்தான்.

''சற்று நேரம் என்னுடன் வந்து வழிகாட்டக் கூடுமா, தம்பி?'' என்று கேட்ட வீரன் சிறுவனைக் கூர்ந்து பார்த்தான். ''தக்கபடி பணம் தருகிறேன்'' என்றும் தெரிவித்தான்.

சிறுவன் கையை விரித்தான். ''மன்னிக்கவும், என்னால் இயலாது. ஆடுகளை விட்டு வர முடியாது. அவை வழி தப்பி அலைந்து காட்டினுள் சென்று ஓநாய்களுக்கு இரையாகிவிடக் கூடும்.'' சிறுவன் குரலில் உறுதியும் கடமையுணர்வும் தொனித்தன.

''அவற்றுக்குங்கூட என்னால் பணம் தர முடியும்'' என்றான் வீரன். விழிகள் செல்வச் செருக்குடன் சிறுவனை அலட்சியமாகப் பார்த்தன. ''நிறைய பணம் தருகிறேன். சிறிது நேரம் ஆடுகளை இங்கே விட்டு வந்து எனக்கு வழி காட்டு.''

''இயலாமைக்கு மெத்த வருந்துகிறேன், ஐயா'' என்று கண்டிப்பான குரலில் பதிலளித்தான் சிறுவன். ''இவை என் எசமானின் ஆடுகள். இவற்றைக் கண்காணிப்பது என் கடமை; தங்களுடன் வருவது பிசகு.''

''சரி. அப்படியானால் வழிகாட்டி ஒருவனை எனக்காக அழைத்து வர இயலுமா? அதுவரையில் உன் ஆடுகளை நான் கண்காணித்துக்கொள்கிறேன்.''

''இதிலும் சங்கடம் இருக்கிறது. தங்களது குரலும் தோற்றமும் ஆடுகளுக்குப் பழக்கம் இல்லையே! அவை மிரண்டு நாலா பக்கமும் ஓடிவிடும்'' என்றான். சட்டென்று சிறுவன் முகத்திலும் குரலிலும் கடுமை ஏறியது. ''உங்களை என்னால் நம்ப முடியாது!''

வீரனின் விழிகள் வியப்பால் விரிந்தன. "என்ன, நீ என்னை நம்பவில்லையா?"

"இல்லை!" என்று உறுதியுடன் பதில் வந்தது. சிறுவன் முகத்தில் அச்சமோ தயக்கமோ சிறிதும் இல்லை. "தங்களது பேச்சு எசமானுக்குக் கீழ்ப்படியாதே என்று எனக்குப் புகட்டுவதாக இருக்கிறது. தங்களை நான் எப்படி நம்ப முடியும்?"

வீரன் சிரித்தான். சிறுவன் மீது சினம், வெறுப்பு ஏதும் கொள்ளவில்லை அவன். "நீ சொல்லுவது முற்றும் சரி!" என்று சிறுவனை மெச்சினான்.

"சிறுவனே, நீ நேர்மை மிகுந்த பையன். உண்மை, விசுவாசம் நிரம்பிய உன்னைப் பணியாளாகப் பெற்ற உன் எசமானன் வாஸ்தவத்தில் ஓர் அதிர்ஷ்டசாலி தான்! சரி, கிராமத்திற்குச் செல்ல வழியை மட்டும் சொல், அது போதும். சமாளித்துப் போய்விடுகிறேன்."

பாதையின் விவரத்தைச் சிறுவன் கூறியதும் வீரன் புரவி மீதேறிப் புறப்பட ஆயத்தமானான்.

திடீரென்று ஐந்தாறு குதிரைவீரர்கள் அவர்களை நோக்கி வந்து கொண்டிருந்தனர் அவர்களில் ஒருவன் குதிரையில் இருந்தபடி உற்சாகமாகக் குரல் கொடுத்தான்; "அதோ, இளவரசர்!" என்று கையை நீட்டினான். "இளவரசே, தங்களை எங்கெல்லாம் தேடுவது? நல்லவேளை, கண்டுபிடித்தோம்" என்று ஆனந்தக் குரலில் கூறினான்.

சிறுவன் துணுக்குற்றான். இளவரசர் என்று தெரிந்து கொள்ளாமல் உதவ மறுத்தமைக்கு வருந்தினான். தண்டித்துவிடுவாரோ என்ற பீதி முகத்தில் சூழ்ந்தது. கண்கள் பயத்தோடு இளவரசனை நோக்கின.

இளவரசன் முகத்தில் புன்னகை இழைந்தது. "சிறுவனே, உன்மீது எனக்குச் சிறிதும் கோபம் இல்லை. நீ கடமை தவறாத கர்மயோகி" என்று பாராட்டினான்.

இளவரசனும் வீரர்களும் அரண்மனை திரும்பினர்.

சில நாட்கள் சென்றன. ஒரு நாள் அரண்மனைச் சேவகன் ஒருவன் வந்து சிறுவனை இளவரசனிடம் அழைத்துச் சென்றான்.

சிறுவன் மௌனமாக நின்றான்.

"ஹான்சு!" என்று அன்பு ததும்ப அழைத்தான் இளவரசன். "உன் ஆடுகளை அங்கே விட்டு வந்து எனக்குப் பணி செய்ய முடியுமா? கடமையுணர்ச்சி மிக்கவன் நீ; உன் சேவை என் நாட்டுக்குத் தேவை" என்று சொல்லிச் சற்று நிறுத்தி முறுவலித்தான் இளவரசன். "நான் உன்னை நம்புகிறேன்."

சிறுவனின் வதனம் மகிழ்ச்சியால் மலர்ந்தது. "இளவரசே, மிக்க நன்றி. நான் என் எசமானிடம் சென்று விவரம் சொல்லி, அவர் தமது ஆடுகளை மேய்க்க வேறு ஒருவரை நியமனம் செய்தபின் தங்களிடம் வர அனுமதி வழங்க முடியுமா?" என்று பணிவுடன் வினவினான்.

இளவரசன் இசைந்தான். ஹான்சு ஒரு வாரம் சென்றதும் அரண்மனை வந்து சேர்ந்தான். அவனது நேர்மையும் கடமையுணர்வும் நாளடைவில் அரசாங்கத்தில் உயர் பதவியைத் தேடித் தந்தன.

சிறுவர்களே, கண்ணன் காட்டிய கர்மநெறி மனிதனை உயர்த்தும் தர்மநெறி என்று உணர்ந்து கடமை ஆற்றுவீர்களாக. இறைவன் உங்களுக்குத் திருவருள் பாலிப்பாராக. ★

# தட்சிணமூர்த்தி

பிரமச்சாரி முத்துக்குமார்



சதாசிவமூர்த்தியின் ஐந்து முகங்களுள் தெற்கு நோக்கிய உருவத்திற்கு அகோரமூர்த்தம் என்று பெயர். அந்த மூர்த்தமே தட்சிணமூர்த்தி என்று வழங்கப்பெறுகிறது.

தட்சிணமூர்த்தி சின்முத்திரையுடன் சாந்தமும் பரஞானமும் உருவெடுத்து விளங்குகிறார். அகண்ட சச்சிதானந்தமாகிய பரம்பொருள் தம்மில் தாமே திருப்தி அடைந்தவராகத் திகழ்கிறார். மனம் வாக்குக்கு எட்டாத பேரானந்தப் பெருநிலை அது. ஆகவே அங்கே பேச்சுக்கு இடமில்லை. எல்லையற்ற பேரானந்தம் ஆழ்ந்த மௌனத்தில் முடிகிறது. 'மோனம் என்பது ஞான வரம்பு.'

## திருவுருவம்

தட்சிணமூர்த்தி தமது வலது முழங்காலில் இடது காலை வைத்திருக்கிறார்; பாதங்களிலும் வயிற்றிலும் சேர்ந்து கட்டப்பட்ட யோகபட்டத்தைக் கொண்டிருக்கிறார்; அபஸ்மாரம் என்ற ரோகதேவதையின் உடலின்மீது அவரது திருபடி பதிந்துள்ளது. ஒரு கையில் சின்முத்திரையையும், ஒரு கையில் கோடரியையும், மறு கையில் மானையும், இன்னொரு கையில் சிவஞான நூலையும் தரித்தவராக ஆழ்ந்த சமாதியில் அவர் மூழ்கியுள்ளார்.

## பாலகுரு

ஆலின் கீழ் அமர்ந்த அண்ணல் எப்போதும் பொலிவு குன்றாத இளமை கொண்டவர். எல்லாவற்றிற்கும் முன்னையவராகவும், புத்தம் புதியவராகவும், அனாதிக்கும் அனாதியாகவும் ஈசுவரன் விளங்குகிறார். 'முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளே பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப் பெற்றியனே' என்று திருவெம்பாவையில் ஒன்பதாவது பாடல் கூறுகிறது. பரம்பொருளிடம் ஒரு போதும் மாறுதலோ குறைதலோ இல்லை; அது குறைவிலா நிறைவு, பரிபூரணப் பொருள். தட்சிணமூர்த்தியின் பூரித்த இளமை, இறைவனின் பூரணத் தன்மையும், அவன் கால தேச வர்த்தமானங்களைக் கடந்தவன் என்பதையும் விளக்குகிறது.

தட்சிணமூர்த்தியின் முன்னிலையில் அறப்பழுத்த ஞானப் பழங்களாக பல வயோதிக முனிவர்கள் அமர்ந்திருக்கிறார்கள். எத்தனை எத்தனையோ பிறவிகளின் மூலம் எண்ணற்ற அனுபவங்களைப் பெற்று பக்குவ நிலையை அடைந்த ஆன்மாக்கள் அவர்கள். அவர்களுடைய உடலின் முதுமை அவர்களின் ஆன்மிக முதிர்ச்சியைக் காட்டுகிறது. ஜீவனின் பிறப்பிறப்பாகிய நீண்ட பயணம் முடிவு பெறவேண்டிய இறுதி இடம் பரமஞானமே உருவாக விளங்கும் தட்சிணமூர்த்தியின் திருச்சன்னிதியேயாகும்.

## மௌனகுரு

பக்குவப்பட்ட ஜீவனாகிய நதி பரம்பொருளாகிய கடலில் ஒன்றுபடும்போது எல்லாம் சிவமயமாகி விடுகிறது. சீவன் சிவனாகிறது. சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி நமையாளும் அத்தனே தட்சிணமூர்த்தியாக எழுந்தருளியுள்ளார். சனகாதி முனிவர்கள் வேதம், ஆகமங்கள், சாஸ்திரங்கள் மற்றும் அனைத்துக் கலைகளும் நன்கு அறிந்தவர்கள். ஆனால் அவர்கள் முழு அளவில் மயக்கம் தீர்ந்தவர்களல்ல. முடிந்த முடிவாகிய பரஞானத்தை அடையும் தகுதி பெற்ற அந்த முனிவர்களுக்கு 'இருந்ததனை இருந்தபடி இருந்து காட்டி, சொல்லாமல் சொல்லி'விடுகிறார் சிவப்பரம்பொருள் என்று திருவிளையாடற்புராணத்தில் பரஞ்சோதி முனிவர் குறிப்பிடுகிறார்.

## நீயே அது

தட்சிணமூர்த்தியின் வலக் கையின் பெருவிரல் ஆள்காட்டிவிரலைச் சேர்த்தும் மற்ற மூன்று விரல்

களைத் தனியே ஒன்றுசேர்த்து நீட்டியும் உள்ள சின் முத்திரை ஒரு பேருண்மையை விளக்குகிறது. "அஞ்ஞானத்தை முழுமையாகப் போக்கும் சின்முத்திரையால் மகரிஷிகளுடைய அஞ்ஞானத்தைக் கருணையினுல் போக்கி, தத்துவமஸி என்னும் மகாவாக்கியத்தின் ஞானம் விளங்குமாறு மகாதேவன் செய்கிருர்" என்று ஆதிசங்கரர் இயற்றிய தக்ஷிணுமூர்த்தி ஸ்தோத்திரத்தில் மூன்ருவது சுலோகம்* சின்முத்திரைக்கு விளக்கம் கொடுக்கிறது.

**பசுபதீசுவரன்**

நீட்டியிருக்கும் மூன்று விரல்களும் ஆணவம் கன்மம் மாயை ஆகிய மும்மலங்களைக் குறிக்கும். பெருவிரலைத் தொட்டுக்கொண்டிருக்கும் ஆள் காட்டி விரல் ஜீவனைக் குறிக்கிறது. பெருவிரல், பதியாகிய ஒப்பற்ற சிவபிரானைக் குறிக்கிறது. இந்த மும்மலர்களால் கட்டுண்டு மயக்கமடைந்த பசுவாகிய ஜீவன் பதியின் கருணையினுல் மும்மலங்களும் நீங்கப்பெற்றுப் பதியாகிய சிவபிராளுேடு ஐக்கியமாவதைச் சின்முத்திரை விளக்குகிறது என்று சைவ சித்தாந்தம் கூறுகிறது.

**வடமூலவாசி**

ஆலய விருட்சத்தின் அடியில் தட்சிணுமூர்த்தி அமர்ந்துள்ளார் என்பது புராண வரலாறு. சாப்பிடப் பயன்படாத பழங்களுடன் ஆலமரம் விழுது விட்டு அழியாமல் மேலும் மேலும் பெருகி வளர்கிறது. ஜீவனின் பிறப்பிறப்பாகிய சம்சாரமும் மாபெரும் ஆலவிருட்சம் போன்றதே ஆகும். வினை என்கிற விதையினுல் முளைத்த சம்சாரத்தில் பலவிதப் புண்ணிய பாவ கர்மங்களாகிய கிளைகள் இருக்கின்றன; மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற அந்தக் கரணங்கள் இலைகளாக விளங்குகின்றன. அந்த மரத்தில் துக்கமாகிய பழம் பழுக்கிறது. மாயை வசப்பட்ட ஜீவன் அறியாமையால் சம்சார விருட்சத்தில் ஏறித்தடுமாறி விழுகிறது. அங்கே ஜீவனைத் தடுத்தாட்கொள்ள, சம்சார விருட்சத்தின் அடியில் பரமதயாளனுகிய சிவபிரான் அருள் பொங்க வீற்றிருக்கிருர். சங்கிலி போலத் தொடர்ந்துவரும் வினைத்தொடரை அறுத்துப் பரம சாந்தியை ஜீவனுக்கு அருள, யோகானுபவம் பொருந்தியவராக ஞானநிஷ்டையில் தட்சிணுமூர்த்தி ஆழ்ந்து காணப்படுகிருர். இந்தக் கருத்தை அவர் ஏந்தியுள்ள கோடரி குறிக்கிறது. ஞானத்துக்கும் அஞ்ஞானத்தின் அழிவுக்கும் சின்னமாக விளங்கும் தீயையும் இவர் ஏந்தியவாறு உள்ள மூர்த்தமும் உண்டு. மிகவும் வேகமாக ஓடக் கூடியது மான். மான், அடக்கப்படாமல் அலைபாயும் மனதிற்கு உதாரணம். சஞ்சலப்பட்ட மனதை அடக்கி உள்நோக்கித் திருப்பி உள்ளொளியைத் தியானிக்க வேண்டும் என்பதைத் தட்சிணுமூர்த்தியின் கையில் இறைவனை நோக்கியவாறு அமைந்துள்ள மான் குறிக்கிறது.

இந்த மூர்த்தியே எல்லா உயிர்களுக்கும் மேலான ஞானத்தை உபதேசித்து உயர்நிலையை அடைய அருள் செய்பவர் என்று சைவசமயம் கூறுகிறது. "சச்சிதானந்தப் பரம்பொருளே குருவாக வருகிருர். ஈசன் ஒருவனே எல்லாருக்கும் குரு. இறைவனே ஒருவனுடைய குரு என்னும் மேனியின் மூலமாக மந்த்ரோபதேசம் செய்கிருர்" என்று பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் கூறுகிருர். இறைவனின் குரு அம்சமே தட்சிணுமூர்த்தி ஆகும். ○

---

* வித்ராவிதாசேஷதமோகணேந
முத்ராவிசேஷேண முஹுர் முநீநாம் |
நிரஸ்ய மாயாம் தயயா விதத்தே
தேவோ மஹான் தத்த்வமஸீதி போதம் ||

---

## சிவ வழிபாட்டுச் சிறப்பு

துங்கபத்திரையாற்றங்கரையில் சுத்தகோடி சுராலயம் என்ற ஊர்இருந்தது. அந்த ஊரில் அந்தணன் ஒருவன் சிவபூஜையை முறைப்படிச்செய்பவன். சூரியன் உதிப்பதற்கு முன் மலரெடுத்து இறைவனை நாள்தோறும் பூசிப்பது அந்த அந்தணனின் வழக்கம்.

சிவபூஜை செய்வோர் பழுதடைந்த மலரையோ பத்திரத்தையோ கொண்டு பூசிப்பது கூடாது.

ஒருநாள் அந்தணன் கவனமின்றிப் பழுதடைந்த மலரைக் கொண்டுபூசை செய்துவிட்டான். புழுவெட்டிய பூவைச் சாத்தியதனுல் அவன் கண்ணொளியை இழந்தான். மனம் மிக வருந்தி, வசிட்ட முனிவரை அடைந்து வேண்டினுன். அவர் கூறியபடி திருவிடைமருதூரை அடைந்தான். கனக தீர்த்தத்தில் நீராடினுன். கோயில் கொண்டிருக்கும் இறைவனுகிய மருதவானரை வழிபட்டான், விழி பெற்ருன். அதனுல் அடுத்த பிறவியில் விசுவாமித்திர முனிவராய்த் தோன்றினுன். தவத்தால் பிரம்மதேவனைவிட மேம்பட்டவனுனுன். இந்தச் சிவபூசையால் அந்த அந்தணன் மேல்நிலை பெற்ருன்.

—திருவிடைமருதூர்த் தல வரலாறு

# பதஞ்ஜலி யோக சூத்திரங்கள்

சுவாமி விவேகானந்தர்

3. ததா த்ருஷ்ட: ஸ்வரூபே அவஸ்தாநம்

அப்போது (மனம் ஒருமுகப்பட்டுத் தியானத்தில் குவிந்திருக்கும் நிலையில்) காண்போனுகிய புருஷன் தனது சொரு பத்தில் (தனக்குச் சொந்தமான, கொஞ்சமும் மாறுதல் அடையாத, பேதமற்ற நிர்க்குண நிலையில்) நிலையாக இருக்கிருன்.

அலைகள் நின்றவுடனே ஏரி அமைதி பெறுகிறது. அப்போது நாம் ஏரியின் அடிப்பாகத்தைப் பார்க்கிறோம். மனதின் விஷயமும் இது போன்றதுதான். மனம் அமைதியுடன் இருக்கும்போது, நாம் நமது சொந்த சொருபத்தை உள்ளது உள்ளபடி அப்படியே பார்க்கிறோம்; வேறு எதனோடும் கலந்து கொள்ளாமல் நம்மில் நாமாகவே இருக்கிறோம்.

4. ஸ்ருத்தி ஸாருப்யமிதரத்ர

மற்ற வேளைகளில் (மனம் ஒருமுகப் பட்டு நிற்காத மற்றச் சமயங்களில்), காண்போனுகிய புருஷன் சித்தவிருத்தி களோடு ஒன்றுபட்டிருக்கிருன்.

உதாரணமாக யாரோ ஒருவன் என்னை நிந்திக்கிறன்; இது என் மனதில் ஒரு விருத்தியை ஏற்படுத்துகிறது. நான் என்னை அந்த விருத்தியோடு ஒன்றுபடுத்திக் கொள்கிறேன். அதன் பயனுக எனக்குக் கவலை ஏற்படுகிறது.

5. வ்ருத்தய பஞ்சதய்ய க்லிஷ்டா அக்லிஷ்டா

விருத்திகள் ஐந்து வகைப்படும். (அவற்றுள் சில) துன்பத்தைத் தருபவை, (மற்றவை) துன்பத்தைத் தராதவை.

6 ப்ரமாண-விபர்யய-விகல்ப-நித்ரா—ஸ்ம்ருதய

அவையாவன 1. பிரமாணம் (மெய்ஞ் ஞானம்), 2. விபர்யயம் (அவிவேகம், பிரமை உணர்வு, விபரீத ஞானம், மாறு பட்டறிவு), 3. விகல்பம் (சப்தப் பிரமை, சொற்பொருள் மயக்கம், சொல்லால் வரும் மயக்கம்), 4. நித்திரை (உறக்கம்), 5. ஸ்மிருதி (நினைவு, ஞாபகம்).

7. ப்ரத்யக்ஷாநுமாநாகமா:ப்ரமாணுநி

பிரத்தியட்சம் (நேரிடையாக ஏற்படும் உண்மை அனுபவம்), அனுமானம், ஆகமம் (தக்க அதிகாரியின் வாக்கியம், அத்தாட்சி கொண்ட சாட்சியம், ஆப்த வாக்கியம் அல்லது பரந்த உலக மக்களின் வாக்கியம்) என்பன பிரமாணள் கங் ஆகின்றன.

நம்முடைய இரண்டு காட்சிகளுக்கிடையில் ஒன்றுக்கு ஒன்று முரண்படாமல் இருக்கும்போது நாம் அதனைப் பிரமாணம் என்கிறோம். நான் ஏதோ ஒன்றைப் பற்றிக் கேள்விப்படுகிறேன் என்று வைத்துக் கொள்வோம். அது ஏற்கனவே என்னுல் அறியப்பட்ட மற்றென்றுக்கு முரண்படுவதாக இருந்தால், நான் அதை எதிர்த்துப் போராடத் துவங்குகிறேன்; அதை நான் நம்பாமலும் விட்டு விடுகிறேன்.

பிரமாணங்கள் மூன்று வகைப்படும். அவற்றுள் பிரத்தியட்சப் பிரமாணம் என்பது ஒன்று. நாம்

நேரில் பார்ப்பதாகவும் உணர்வதாகவும் உள்ள எதுவும் பிரமாணமாகும்; ஆனால் நாம் அப்படிப் பார்ப்பதிலும் உணர்வதிலும் புலன்களை மயக்க வைக்கும் எதுவும் குறுக்கிடாமல் மட்டும் இருக்க வேண்டும். நான் உலகத்தைப் பார்க்கிறேன். உலகம் இருக்கிறது என்பதற்கு அது போதிய பிரமாணமாகும்.

அனுமானம் (ஊகித்தல்) என்பது இரண்டாவது பிரமாணம். நீங்கள் ஏதோ ஓர் அடையாளத்தைப் பார்க்கிறீர்கள். அதிலிருந்து அந்த அடையாளம் குறிப்பிடும் பொருளைப்பற்றி அறிந்துகொள்கிறீர்கள்.

ஆப்தவாக்கியம் என்பது மூன்றாவது பிரமாணம். இது மெய்ப்பொருளைக் கண்டவர்களாகிய யோகிகளின் நேரான காட்சி அனுபூதியாகும். அதாவது யோகிகள் நேரிடையாகத் தாங்கள் கண்டறிந்த ஆன்மிக உண்மைகளைப்பற்றித் தெரிவித்துள்ள கருத்துக்கள் ஆப்தவாக்கியம் எனப்படுகின்றன.

நாம் அனைவருமே ஞானத்தைப் பெறப் போராடிக் கொண்டிருக்கிறோம். ஆனால் நீங்களும் நானும் ஞானம் பெறுவதற்குக் கஷ்டப்பட்டுப் போராட வேண்டியிருக்கிறது; நீண்ட காலம் ஆராய்ந்த பிறகு அறிந்து கொள்வதாகிய ஒரு நீண்ட, சலிப்பூட்டும் பாதை வழியாகச் சென்றே நாம் ஞானத்தை அடைய வேண்டியவர்களாக இருக்கிறோம். ஆனால் பரிசுத்தவானாகிய யோகியோ இந்த நிலைகளையெல்லாம் கடந்து அப்பால் சென்று விட்டான். அவனது மனதின் முன்னால் இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் ஆகிய எல்லாம் ஒரே மாதிரியாகவே இருக்கின்றன; அவை அவனால் படிக்கப்படும் ஒரே ஒரு புத்தகம் போன்று இருக்கின்றன; அவனுக்கு நம்மைப் போல ஆராய்ந்து பார்க்கும் அல்லல் நிறைந்த, சலிப்பூட்டும் முறைகளின் மூலம் ஞானத்தைத் தேட வேண்டிய அவசியம் இல்லை. ஏனென்றால், அவன் தன் உள்ளத்திலேயே ஞானத்தைப் பார்க்கிறான். ஆகவே அவனுடைய வாக்குகள் பிரமாணங்களாக இருக்கின்றன. உதாரணமாக, புனித நூல்களாகக் கருதப்படும் சமய சாஸ்திரங்களை இத்தகைய மெய்ஞ்ஞானிகளே தோற்றுவித்தார்கள். ஆதலால் சாஸ்திரங்கள் பிரமாணமாகின்றன. இப்போது இத்தகைய மெய்ஞ்ஞானிகள் எவரேனும் வாழ்ந்திருப்பார்களானால் அவர்களுடைய வாக்குகளும் பிரமாணமே ஆகும்.

வெறும் ஏட்டுக் கல்வியைப் பெற்ற தத்துவ மேதைகள் சிலர் ஆப்த வாக்கியம் என்பதுபற்றி நீண்ட விவாதங்கள் நிகழ்த்தி, ''ஆப்தர்கள் (மெய்ஞ் ஞானிகள்) என்று சொல்லப்படுபவர்களின் கருத்துக்கள் உண்மைதான் என்பதற்கு என்ன பிரமாணம் இருக்கிறது?'' என்று கேட்கிறார்கள். அதற்குப் பதில், ''ஆப்தர்கள் அந்தக் கருத்துக்களைப் பிரத்தியட்சமாக நேரே சுவானுபூதியில் பெற்றார்கள் என்பதுதான் அவை உண்மை என்பதற்கு உரிய பிரமாணம்'' என்பதே ஆகும். ஏனென்றால், நான் காண்பது எதுவாயினும் அது பிரமாணமாகும். நீங்கள் காண்பது எதுவாயினும் அதுவும் பிரமாணமாகும்—ஆனால் முன்பே ஏற்பட்ட பழைய ஞானம் எதற்கும் அது முரண்படாமல் ஒத்திருக்க வேண்டும்.

புலன்களைக் கடந்து அப்பாற்பட்ட நிலையில் பரஞானம் என்ற ஒன்று இருக்கிறது. அந்தப் பரஞானம் யுக்திக்கும் (தர்க்க அறிவுக்கும்) பண்டைய அனுபூதிமான்கள் அனுபவத்திற்கும் முரண்படாதிருக்கும் வரையில் அந்த ஞானம் பிரமாணமே ஆகும். எவனாவது ஒரு பைத்தியக்காரன் இந்த அறைக்குள் நுழைந்து, தன்னைச் சுற்றிலும் தேவதைகளைப் பார்ப்பதாகச் சொல்லலாம். அப்படி அவன் சொல்வது பிரமாணம் ஆகிவிடாது. பிரமாணம் என்று ஏற்றுக் கொள்வதற்கு, முதலாவதாக அது மெய்ஞ்ஞானமாக இருந்தாக வேண்டும்; இரண்டாவதாக அது பண்டைய ஆன்மிக அனுபவங்களுடன் முரண்படுவதாக இருக்கக்கூடாது; மூன்றாவதாக அதை வெளியிடும் மனிதனுடைய குணத்தைப் பொறுத்துத்தான், அவன் சொல்வது பிரமாணம் என்றோ பிரமாணம் ஆகாது என்றோ தீர்மானிக்கப்பட வேண்டும்.

''ஒருவன் என்ன சொல்கிறான் என்பதுதான் முக்கியமே தவிர, அவனுடைய குணம் எத்தகையது என்பதைப் பொருட்படுத்த வேண்டியதில்லை. ஒருவன் சொல்வதையே நாம் முதலில் கேட்க வேண்டும்'' என்று சிலர் சொல்வதை நான் கேட்டிருக்கிறேன். இப்படிச் சொல்வது மற்றத் துறைகளுக்குப் பொருத்தமாக இருக்கலாம். ஒரு மனிதன் கொடியவனாகவும் தீய ஒழுக்கம் கொண்டவனாகவும் இருக்கலாம்; என்றாலும் அவன் வானசாஸ்திரம் சம்பந்தமான ஒரு புதிய உண்மையைக் கண்டு பிடித்திருக்கலாம். ஆனால் ஆன்மிகத் துறையிலோ அப்படி இல்லை. ஏனென்றால், மனத் தூய்மையற்ற மனிதன் எவனும் ஆன்மிக உண்மைகளை அடைவதற்கு உரிய ஆற்றலை ஒருபோதும் பெற முடியாது.

ஆதலால், தன்னை ஓர் ஆப்தன் என்று சொல்லிக் கொள்பவன் முழு அளவில் சுயநலத்திலிருந்து விடுபட்டிருப்பவனாகவும், முழு அளவில் தெய்விகம் வாய்த்தவனாகவும் இருக்கிறான் என்பதை எல்லா வற்றுக்கும் முதலாவதாக நாம் கவனிக்க வேண்டும் இரண்டாவதாக, அவன் புலன்களுக்கும் அப்பா லான இந்திரியாதீத நிலையை அடைந்திருக்கிறான் என்பதை உறுதி செய்துகொள்ள வேண்டும். மூன்றாவதாக, அவன் சொல்வது, அனுபூதிமான்கள் ஏற்கனவே அடைந்திருக்கும் உண்மைகளுக்கு முரண்படுவதாக இருக்கக் கூடாது. புதிதாகக் கண்டுபிடிக்கப்படும் எந்த உண்மையும் பழைய உண்மைக்கு முரண்படுவதாக இருப்பதில்லை. பழைய உண்மைக்கு ஒத்ததாகவும் அதை அனுசரித்ததாகவும் புதிய உண்மை இருக்கும். நான்காவதாக, அந்த உண்மை பிறரும் ஆராய்ந்து தெரிந்து கொள்வதற்குச் சாத்தியம் உள்ளதாக இருக்க வேண்டும். ஒருவன், "நான் ஒரு காட்சி யைப் பார்த்திருக்கிறேன்" என்று சொல்லி, அதே சமயத்தில் அதைப் பார்ப்பதற்கு எனக்கு உரிமை கிடையாது என்று என்னிடம் சொல்வானானால், அவன் சொல்வதை நான் நம்பமாட்டேன். ஒவ்வொருவனும் தனக்குத் தானே அதை நேரில் பார்க்கும் சக்தியைப் பெற்றிருக்க வேண்டும். தனது அறிவை விலைக்கு விற்பவன் எவனும் ஆப்தன் ஆகமாட்டான்.

இங்கு குறிப்பிடும் இந்த நிபந்தனைகளெல்லாம் சரியாக நிறைவு பெற்றிருக்க வேண்டும்:

முதலாவதாக, ஞானத்தை வழங்க முன்வரும் அந்த மனிதன் தூய்மை உள்ளவனாக இருக்கிறான் என்று நீங்கள் கவனிக்க வேண்டும்; அவனிடம் சுயநல நோக்கம் அறவே இல்லாமல் இருக்கிறதா என்றும் பார்க்க வேண்டும்; சுயலாபத்திற்காவது, புகழ் பொருள் போன்றவற்றிற்காவது அவனிடம் வேட்கை எதுவுமே இல்லாமல் இருக்கிறதா என்றும் பார்க்க வேண்டும்.

இரண்டாவதாக, அவன் புலன்களைக் கடந்து விளங்கும் ஞானநிதமான நிலையை அடைந்தவன் என்பதைக் காட்ட வேண்டும். நம்முடைய புலன் களின் மூலம் நம்மால் பெற முடியாத ஒன்றை அவன் நமக்கு அனுக்கிரகத்தின் மூலம் அளிக்க வல்லவனாக இருக்க வேண்டும். அந்த ஒன்றும் உலகிற்கு நன்மையைத் தருவதாக இருக்க வேண்டும்.

மூன்றாவதாக, அவனால் வழங்கப்படும் அந்த ஒன்றும் மற்ற ஆன்மிக உண்மைகளுடன் முரண் படாமல் இருக்கிறதா என்பதை நாம் பார்த்துக் கொள்ள வேண்டும்; அது விஞ்ஞானரீதியான மற்ற உண்மைகளை மறுப்பதாக இருந்தால் உடனே அதை நாம் ஒதுக்கித் தள்ளிவிட வேண்டும்.

நான்காவதாக, அந்த மனிதன் விநோதமான ஒரு கொள்கையைத் தனக்கு மட்டுமே உரிய தனித் தன்மையாக ஒருபோதும் கொண்டிருக்கக்கூடாது; எல்லா மக்களும் அடையக் கூடியதாக இருக்கும் ஒருநிலைக்கு மட்டுமே அவன் விளக்கமாக இருத்தல் வேண்டும்.

ஆகவே இவ்விதம் 1. பிரத்தியட்சம், 2. அனு மானம், 3. ஆப்தவாக்கியம் ஆகிய மூன்றும் இப்போது நமக்குப் பிரமாணங்கள் ஆகின்றன.

ஆப்தன் என்ற சொல்லை என்னால் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்க முடியவில்லை. ஆவேசம் கொண்டவன் என்ற கருத்தைத் தரும் 'இன்ஸ் பையர்ட்' (Inspired) என்ற சொல் பொருத்தமாக இல்லை. ஏனென்றால், இந்த ஆவேசம் என்பது வெளியேயிருந்து உள்ளத்திற்கு வருகிறது என்று நம்பப்படுகிறது. இந்த ஞானமோ அந்த மனிதனு டைய உள்ளத்திலிருந்தே வருவதாகும். மூலச் சொல்லின் கருத்துப்படி பார்த்தால் ஆப்தன் என்பது 'அடைந்தவன்' என்று பொருள்படு கிறது. ☆

எங்கே பெண்களுக்குக் கௌரவம் அளிக்கப்படுகிறதோ, அந்த இடத்தைப் பற்றிக் கடவுள்களும் திருப்தியடைகிறார்கள். அவர்கள் கௌரவிக்கப்படாத இடங்களில் எந்தப் புண்ணிய காரியமும் பலன் தராது.

— மனு

தனக்கு நீர் கிடைக்கவில்லை; மற்றவருக்குப் பால் தானம் செய்கிறான். தன் மனம் தைரியம் அடையவில்லை; மற்றவர்களுக்குத் தைரியம் ஊட்டுகிறான். உலகில் சொல் எல்லாம் சக்கைதான். செய்கைதான் சாரமானது. செய்கை வலுவுள்ளது. பிறவிக் கடலில் இறங்கிக் கரையேற்றும்.

— கபீர்



# இந்துமதமும் கௌமார தத்துவமும்

நா. மகாலிங்கம், பி. எஸ். ஸி., எப். ஐ. இ.

ஆதியில் மனிதன் இயற்கை நிகழ்ச்சிகளைக் கண்டு பயந்தான்; திகைத்தான்; வியந்தான். இடியையும் மின்னலையும், மழையையும் நதியையும், விண்ணையும் மண்ணையும் கூர்ந்து கவனித்தான். பிறப்பையும், இறப்பையும் கண்டு வியந்தான். உலகத்து ஜீவராசிகள் அவனுக்குப் பிரமிப்பையும் பயத்தையும் உண்டாக்கின.

'இவற்றுக்கெல்லாம் காரணம் என்ன? பிரபஞ்ச இயக்கத்துக்கு மூலாதாரம் என்ன?' என்று சிந்தித்தான்.

அன்றைய அறிவாளிகளின் சிந்தனையில் எத்தனையோ சிக்கலான கேள்விகள் பின்னிப் பிணைந்து எழுந்தன. அதில் பல முடிவுகளை அவர்கள் கண்டனர். இதுதான் தத்துவஞானம் ஆரம்பமான கதை.

சூரியனைப் பற்றியோ, சந்திரனைப் பற்றியோ நட்சத்திரங்களைப் பற்றியோ, அண்டங்களைப் பற்றியோ, மழையையும் மின்னலையும் பற்றியோ, உடல் நலத்தையும் வியாதியையும் பற்றியோ, பஞ்ச பூதங்களையும் அவற்றின் தன்மைகளையும் பற்றியோ திட்டவட்டமாக முடிவுக்கு வர முடியாத அந்தக் காலத்தில், அவற்றைப்பற்றி எல்லாம் நமது ஞானிகள் தத்துவ விளக்கம் கொடுத்தனர்.

அந்தக் காலத்திலிருந்து தத்துவஞானத்திற்காகப் பல அறிஞர்கள் பாடுபட்டு வருகிறார்கள். நம் நாட்டில் பலப்பல ஞானிகள் தம் வாழ்நாள் முழுவதும் மிகுந்த வேட்கையுடன் இந்த அற்புத ஞானத்திற்காகவே தங்களை அர்ப்பணித்திருக்கிறார்கள். ஆதி காலத்திலிருந்தே தத்துவஞானிகளுக்கு இருக்கும் பெருமையும் செல்வாக்கும் வேறு யாருக்கும் இருந்ததில்லை.

நமது ஞானிகள் சிலமான வாழ்க்கையும், வற்றாத சிந்தனையும், பிற எதையும் துச்சமாக மதித்துப் பற்றறுத்துவிட்ட மனப்பாங்கும், எல்லாரும் போற்றி வணங்குவதற்கு உரியனவாகவே இருந்து வருகின்றன

இன்றைக்கு எல்லாத் துறைகளிலும் தத்துவ ஞானமே ஆட்சி செலுத்தி வருகிறது. அது விஞ்ஞானப் பகுதிகளாகிய பௌதிகமாகவும், வானசாத்திரமாகவும், உயிரியலாகவும், பொருளியலாகவும், அருளியலாகவும் பலமாக விரிந்து நின்ற ஆட்சி செலுத்தி வருகிறது. எல்லாம் சேர்ந்ததுதான் தத்துவஞானம்.

தத்துவஞானத்தில் அடங்கியிருக்கும் இந்த எல்லா ஞானங்களும் சிந்தனைச் செறிவு நிறைந்தவை.

நமது நாட்டின் இமயமலைச் சாரலிலும், கங்காநதி தீரத்திலும், கோதாவரிக் கரையிலும், காவிரியோரத்திலும் வாழ்ந்து வந்த எத்தனையோ ஞானிகள் வளர்த்தது இந்தத் தத்துவஞானம். ஞானிகள் ஏவல் செய்ய, சிந்தனைத் தேர் ஏறிப்பவனி வந்தது இந்தத் தத்துவஞானம். இந்தத் தத்துவஞானப் பரம்பரை நீண்ட நெடிய பரம்பரை, வாழையடி வாழையாக வளர்ந்து வரும் ஒப்பற்ற ஞானப் பரம்பரை.

சார்வாகரும், யாக்ஞவல்கியரும், மைத்ரேயரும், ஜாபாலரும், உத்தாலகரும், பரத்துவாசரும், கண்வரும், கௌதமரும், கார்க்கியும் தவம் இருந்து வளர்த்தது இந்தத் தத்துவஞானம்.

திருமூலரும், பட்டினத்தடிகளும், தாயுமானவரும், ஆழ்வாரும். நாயன்மார்களும் அப்பரும் சுந்தரரும் மாணிக்கவாசகரும் மெய்கண்டாரும், சங்கரரும் இராமானுஜரும், ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சரும் இராமலிங்க வள்ளலாரும் வளர்த்தது இந்தத் தத்துவ ஞானம்.

தத்துவஞானம் நமது நாட்டுக்கு மட்டும் சொந்தமல்ல; உலகத்துக்கே சொந்தமானது. ஆனால் நமது நாட்டு ஞானத்துக்கும் மேலைநாட்டு ஞானத்துக்கும் அடிப்படையிலே அதிக வித்தியாசம் உண்டு. மேலைநாட்டுத் தத்துவம் ஸ்தூலமான உலகப் பொருள்களைப் பற்றியே விரிவாக ஆராய்கிறது. நம் நாட்டுத் தத்துவமோ இறைவன், உலகம், உயிர் இந்த மூன்றையும் பற்றி நுட்பமாக ஆராய்ந்து முடிவு செய்திருக்கிறது.

தத்துவஞானத்தில் இந்தியாவின் பங்கு அளவிட முடியாதது. உலக மதங்களில் மிகப் பழமையானது

இந்து மதம். இந்து மதத்துக்கோ, இந்து மதத்தின் மூலமான தத்துவங்களுக்கோ காலத்தை நிர்ண யிக்க முடியாது.

இந்து மதம் ஒரே ஒரு புத்தகத்துள் அடங்கினது அல்ல. ஒரு தனிமனிதனின் சிந்தனையில் மட்டும் உருவானது அல்ல. வரலாற்றுல்கூட நிர்ணயிக்க முடியாத காலம் தொட்டு நமது நாட்டின் புனித நதிக் கரைகளிலும், மலைக்குகைகளிலும் அடர்ந்த காடுக ளிலும் இந்தத் தத்துவஞானத்துக்காகவே வாழ்ந்த ஞானிகள் தங்களுடைய மாபெரும் சிந்தனையில் செல்வமாக விட்டுச் சென்றிருக்கும் சொத்துக்கள் தாம் இந்து மதத் தத்துவங்கள்.

இந்தத் தத்துவங்கள்தாம் நம்மையும், இந்தப் பிரபஞ்சத்தையும், இந்தப் பிரபஞ்சத்தை இயக்கும் பேர் அருள் ஒளி பற்றிய இரகசியங்களையும் நுணுகி ஆராய்கின்றன.

இந்து மதம் என்று சொல்லும்போது அதில் பல பிரிவுகள் அடங்கியுள்ளன. எல்லாப் பிரிவுகளுக்கும் மூலாதாரமாக உள்ளவை வேதங்கள்தாம்.

வேதங்களின் முதல் வேதம் ரிக்வேதம். மற்ற மூன்று வேதங்களும் இதற்குப் பின்னல் தோன்றி யவை. வேதங்களுக்குக் கடைசியில் உபநிஷதங் கள் அவற்றின் முடிவுகளாக அமைவதால் உப நிஷங்களை வேதாந்தம் என்பார்கள்.

இந்த வேதாந்தங்களை அடிப்படையாகக்கொண்டு எழுந்தவை இந்தியத் தத்துவங்கள். இந்துக்கள் என்றுலே வேதங்களை ஏற்றுக்கொண்டவர்கள் என் பதுதான் பொருள். இந்து மதத்தின் மூலாதாரமே வேதங்கள்தாம்.

இந்து மதத்தில் ஒரே கடவுள்தான் உண்டு. இந் தியத் தத்துவஞானமே இந்த ஒரே கடவுளைப் பற்றி யதுதான். இந்து மதத்தினர் பல்வகைக் கடவுளரை வணங்கினுலும் அவர்கள் எல்லோரும், 'இறைவன் ஒருவனே' என்ற அடிப்படைக் கொள்கையை ஒப்புக்கொண்டவர்கள்தாம்.

ஒவ்வொருவருடைய கடவுள் கொள்கைக்குத் தக்கபடி கடவுளின் உருவம் அமைகிறது. சோதிமய மானவன் இறைவன். உருவம் அற்றவன் இறைவன். ஆனல் மனிதனின் மனதில் அவன் மனம் உருவகப் படுத்தும் உருவில் கடவுள் தாமே அமைகிருர்.

''ஒரு நாமம் ஓர் உருவம் ஒன்றுமில்லார்க்கு, ஆயிரம்
திருநாமம் பாடி நாம் தெள்ளேணம் கொட்டாமோ''

என்று திருவாசகம் சொல்கிறது.

கடவுள் ஒன்றுதான் என்று சாதிக்கும் இந்தியத் தத்துவங்கள் கடவுளைப் பல உருவங்களில் வழிபட அனுமதித்திருப்பதுதான் இந்து மதத்தின் தனிப்பட்ட சிறப்பு.

வேறுபடும் சமயமெலாம் புகுந்து பார்க்கின்
விளங்கு பரம்பொருளே நின்விளையாட்டு அல்லால்
மாறுபடும் கருத்து இல்லை, முடிவில் மோன
வாரிதியின் நதித்திரள்போல் வயங்கிற்று அம்மா!

என்று இந்து மதத்தைச் சேர்ந்த ஒரு ஞானியால் தான் தலைநிமிர்ந்து பாட முடியும்!

இந்தப் பண்பாடுதான் இந்திய மண்ணில் பண்டை நாளிலிருந்து இன்றுவரை சிதையாமல் நிலைத்திருக்கிறது.

உபநிஷதங்களை அடிப்படையாகக் கொண்ட சங்கரரின் சிந்தனைதான் இன்று பொதுவாக வேதாந்தம் என்று அழைக்கப்படுகிறது. சங்கரரால் தான் ஆன்மிகவாதம் மிக்க உச்சமும் அழுத்தமு மான ஓர் நிலையைப் பெற்றது.

சங்கரர் காலத்தில் இந்து மதம் பல்வேறு பிரிவு களாக இருந்து வந்தது. பல்வேறு கடவுளரை மக்கள் வணங்கி வந்தார்கள். இதனுல் மக்களுக் கிடையே சமுதாய ஒற்றுமை குலைய ஆரம்பித்தது. இந்து சமயத்தைச் சார்ந்த மக்களிடம் இந்து சமயம் அல்லாத பிற சமயங்களின் ஆதிக்கம் தலையெடுக்க ஆரம்பித்தது.

இந்தச் சமயத்தில்தான் பல்வேறு வழிபாடுகளைக் கொண்ட இந்து சமயத்தில் அறுவகை வழிபாட்டு முறையைச் சங்கரர் ஏற்படுத்தினுர். 'ஷண்மத ஸ்தாபனம்' செய்தார். காணபத்யம், கௌமாரம், சாக்தம், சைவம், வைணவம், சௌரம் என்ற அறுவகை மதத்தை நிறுவினுர்.

நமக்கு இயற்கையாக நான்கு பருவங்கள் உண்டு. பால்யம், கௌமாரம், யௌவனம், முதுமை என்பன அவை.

குமரனே நிரந்தரமாகக் கௌமாரப் பருவத்தி லேயே இருக்கிறவன். அதனுலே அவனை வர்ணிக் கும் வழிபாட்டுக்குக் கௌமாரம் என்ற பெயர் ஏற்பட்டது.

'கௌமார மதம்' என்றுல் முருகனை வழிபடும் கொள்கையைக் குறிப்பதாகும். 'கௌமார சமயம்' என்றுல் முருகனை வழிபடும் கொள்கையைச் செயற்படுத்தும் முறையைக் குறிப்பதாகும்.

முருகனை அழகன் என்றும், குமரன் என்றும், இளைஞனாக இருப்பவன் என்றும் கூறுகிறார்கள். சத்தியம் என்பது மாறுபாடில்லாத ஒரு பொருள் ஆகும். எந்தக் காலத்தும் நிலைத்திருக்கும் பிரம்மம் ஆகும். மாறுபடாத சத்தியமாக என்றும் நிலைத்திருக்கும் குமரனாக, அழகனாக திகழ்பவன் முருகன்.

''என்றும் இளையாய் அழகியாய் ஏறு ஊர்ந்தான்
ஏறே உளையாய் என் உளத்தே உறை''

என்று கந்தனைப் பாடிப் பரவுகிறார் ஒரு தத்துவ ஞானி.

''சுக்குக்கு மிஞ்சின மருந்துமில்லை
சுப்பிரமணியனுக்கு மிஞ்சின தெய்வமும் இல்லை''

என்று பாமர மக்களும் பாடிப் பரவுகிறார்கள்.

''அருவமும் உருவமாகி, அநாதியாய், பலவாய், ஒன்றாய் பிரம்மமாய் நின்ற, சோதிப் பிழம்பு அதுஒர் மேனியாகி'' என்கிறார் கந்தபுராண ஆசிரியரான கச்சியப்பர்.

அதாவது முருகனைப் பரப்பிரம்மம் என்றும், எங்கும் நீக்கமற நிறைந்திருப்பவன் என்றும், சோதி மயமானவன் என்றும் சொல்லி வியக்கிறார்.

முருகனின் வேல் சோதி வழிபாட்டைக் குறிக்கும் ஒரு சின்னமாகும். சோதியை வழிபடுவதும் முருகனின் வேலை வழிபடுவதும் ஒன்றுதான்.

''கைவாய் கதிர்வேல் முருகன் கழல்பெற்று
உய்வாய் மனமே''

என்கிறார் அருணகிரிநாதர்.

'முருகன் திருவடிகளைப் பெற விரும்புவீர்களானால், அவன் கையில் சோதிச் சுடராக ஒளிவீசுகிற வேலை வணங்குங்கள்' என்பதுதான் இதற்குப் பொருள்.

''தோகைமேல் உலவும் கந்தன்
சுடர்க்கரத்து இருக்கும் வெற்றி
வாகையே சுமக்கும் வேலை
வணங்குவது எமக்கு வேலை''

என்று, 'சோதியின் சின்னமாக விளங்கும் வேலை வணங்குவதுதான் எனக்கு வேலை' என்கிறார் மகாகவி பாரதியார்.

சமயங்கள் ஆறு; கோசங்கள் ஆறு; ஆதாரங்கள் ஆறு; தத்துவங்கள் ஆறு; சாத்திரங்கள் ஆறு; நான்கு வேதங்களும் இரண்டு இதிகாசங்களும் சேர்ந்து ஆறு என்று எல்லாமே ஆறு ஆறாக இருக்கின்றன.

முருகப்பெருமான் ஆறு முகங்களுடன் விளங்குவதும் 'அவனே அனைத்துமானவன்' என்பதற்கு எடுத்துக்காட்டாக இருக்கிறது.

ஆறுமுகனே ஓங்காரக் கடவுள். ''ஓர் எழுத்தில் ஆறு எழுத்தை ஓதுவித்த பெருமானே'' என்று அருணகிரிநாதர் இதையே விவரிக்கிறார்.

வெளியிலிருக்கும் இந்த ஆறுமுகக் கடவுள் நமக்கு உள்ளே இருக்கும் ஆறுமுகச் சுடரின் சின்னம்தான். மனம் அடங்கும் இடத்தைப் புருவ மத்தி என்று சொல்வார்கள். யோகசாதனைகள் செய்து புருவமத்தியாகிய வாசலைத் திறந்து சென்றால் அங்கு ஆறுமுகச்சுடர் சோதிமயமாக ஒளிர்வதைக் காணலாம்.

''நெற்றிக்கு நேரே புருவத்து இடைவெளி
உற்றுஉற்றுப் பார்க்க ஒளிவிடும் மந்திரம்
பற்றுக்குப் பற்றாய்ப் பரமன் இருந்திடும்
சிற்றம்பலம் என்று சேர்ந்து கொண்டேனே!''

என்கிறார் திருமூலர். நமது புருவமத்தியில்தான் ஆறுமுகச்சுடருடன் இறைவன் இருப்பதை எல்லா ஞானசாத்திரங்களும் கூறுகின்றன. இந்த இறைவனைத்தான் ஆறுமுகக் கடவுளாக வழிபடச் சொல்கிறது கௌமார தத்துவம். *



அகலிகைக்கு மோட்சம் தந்தபின் இராமன், விசுவாமித்திரர் பின்னே மிதிலைக்குச் செல்கிறான். வழியில் ஓர் ஆறு குறுக்கிட்டது. முனிவர் படகுக்காரனுக்குச் சொல்லி அனுப்ப, அவனும் படகுடன் வந்துவிட்டான். இலக்குவனும் முனிவரும் படகில் ஏறிவிட்டனர். இராமன் ஏறப்போகும் சமயத்தில் படகோட்டி தடுத்தான். ''ஐயா! சற்றுப் பொறுங்கள். எனக்கு இருப்பதோ மரத்தாலான இந்த ஒரு படகுதான்; தங்கள் கால் தூசு பட்டவுடன் கல் பெண்ணாயிற்றும். முதலில் உங்கள் கால்களை நான் கழுவுவேன். பிறகுதான் தங்களைப் படகில் ஏற அனுமதிப்பேன். ஏனெனில் மரத்துக்கும் கல்லுக்கும் அதிக வித்தியாசம் இல்லை அல்லவா?'' என்றான் படகோட்டி!

—அத்யாத்ம ராமாயணம்



# அசலமும் நடனமும்

ரா. கணபதி

ஸ்ரீசங்கர பகவத் பாதர்கள் ''விவேக சூடாமணி;யில் பிரஹ்மஞானியின் லக்ஷணங்களை— அல்லது லக்ஷணமில்லாமையை— சொல்கையில் அவனை ''சிதம்பரஸ்த:'' என்கிறார். சிதம்பரத்தில் இருப்பவனும் அவன். இதயத்துள்ளே உள்ள சின்னஞ்சிறு வெளியாம் உபநிஷத தஹராகாசமே சிற்றம்பலமும் ஞானவானமுமான சிதம்பரம். எனவே ஞான மூர்த்தி ரமணரின் சிதம்பரத் தொடர்பை இவ்விதழிலும் தொடர்ந்து காணலாம்.

ஹ்ருதய சிதம்பரஸ்தரான ரமணர் ஆகாச க்ஷேத்ரமான வெளி சிதம்பரத்துக்கே சிறப்புப் பெற்ற திருவாதிரையின் பெருமையை எடுத்துத் திருவருணைக்குச் சூட்டிவிட்டதை முன்பு பார்த்தோம்.

'பிரம்மஞானிக்கு எல்லா க்ஷேத்ரமும் எல்லா மூர்த்தியும் ஒன்றுதானே? அவர்கள் அவற்றில் ஒன்றுக்கொன்று தாரதம்யமாகப் பேசுவார்களா?' என்று பிரம்மஞானியாக இல்லாதவர்கள் புஸ்தக ஞானத்தை மட்டும் வைத்துக்கொண்டு கேட்கலாம். ஆனால் அந்த நிஜ பிரஹ்மஞானிகளோ தாங்களும் ஆண்டவன் கையில் அடக்கமாக இருந்துகொண்டு அவன் தங்களையும் துளித்துளி த்வைதம் போன்ற லீலையில் ஆட்டிவைப்பதை ரஸித்துக் கொண்டு தானிருந்திருக்கிறார்கள். தங்களுடைய அத்வைத சுத்த அன்னத்தின் ரஸத்தை உணரவே அதில் த்வைத (மிளகு) ரஸத்தை கலந்து கொண்டு சுவைத்திருக்கிறார்கள். நமக்குத்தான் த்வைதம் குழம்பிக் குழம்பாக இருக்கிறது; அவர்களுக்கு அதுவும் ரஸம் தான்!

பக்தி மிளகு ரஸத்தில் ஞான நெய் தாளிப்புச் செய்த நம் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் அத்வைதானுபவம் உள்பட அனைத்துமே அம்மாவின் ஆளுகைக்கு உட்பட்டதுதான் எனக் கண்டவர். ஞான மோக்ஷத்துக்கான திறவுகோலை ஸர்வேச்வரியே வைத்திருக்கிறாள் என்று பிரத்யக்ஷமாகக் கண்டு சொன்னார். லோக நிர்வாஹம் முழுவதும், இந்த லோகத்தில் ஒரு பிரஹ்மஞானி இருப்பதாகக் காணும் வரையில் அவனைக் குறித்த விஷயங்களுங்கூட, அகிலாண்ட மஹாசக்தியான ஈச்வரன் வசமானதே என்பதை மெய்ஞ்ஞான மூர்த்தியான ரமணரும் பல விதங்களில் பல ஸமயங்களில் எடுத்துக் கூறியிருக்கிறார். தமது சரீர யாத்திரைக்கு அவசியமான அது அதுவையும் பார்த்துப்பார்த்துப் பூர்த்திசெய்த ஆண்டவனின் அருளை வியந்து கசிந்திருக்கிறார். ஞான பக்தி விக்ரஹமான பரமஹம்ஸரும் பக்தி ஞான பிரதிமையான ரமண பகவானும் இப்படி ஒரே குரலில் தான் பேசுகிறார்கள். ஞான நிலையைக் குறிக்கும் ''ஹம்ஸ'' அடைமொழி பக்த ராமகிருஷ்ணரையும், பக்தி லக்ஷ்யமான ''பகவான்'' என்னும் அடைமொழி ஞானி ரமணரையும் சேர்ந்ததிலும் பொருத்தமே தெரிகிறது. ஆயினும் வித்யாஸப் படுத்தும் த்வைத விளையாட்டில் பரமாத்ம சக்திக்கு ஒரு குதூஹலமாதலின் பரமஹம்ஸரை அம்மா அம்மா என்று காளியன்னையிடம் களி கொள்ள வைத்தது; ஸ்ரீ ரமணரை அப்பா அப்பா என்று அருணாசலேச்வரனின் அருளில் திளைக்க வைத்தது.

எப்படித் திளைத்து, அவன் வசமே ஞானியான தாமும் என்று அடங்கியிருந்தார் என்பதை ஒரு சிறு ஸம்பவத்தில் பாருங்கள். ஸம்பவம் ரொம்ப சிறுசு தான்; அதில்வரும் அநுபவமோ மஹா பெரிசு.

**1945-ஆம்** ஆண்டு கார்த்திகை தீபோத்ஸவத்துக்கு இரண்டு நாட்களுக்குப் பின்னர் அருள்மிகு அண்ணாமலையார் அடியார் குழு மேளதாளத்து

டன் கிரி பிரதக்ஷிண உலா வருகிறார். ஸ்ரீரமணாச்ரம வாயிலில் ஸர்வாதிகாரி ஸ்ரீ நிரஞ்ஜனானந்த ஸ்வாமி —பகவானின் பூர்வாச்ரமத் தம்பியான இவரைச் 'சின்னஸ்வாமி' என்பார்கள் — அருணாசலேச்வர னுக்குத் தேங்காயும் கர்ப்பூரமும் அர்ப்பணிக்கிறார். அர்ச்சகர் ஆரத்தி எடுத்துத் திருநீற்றுப் பிரஸாதம் கொடுக்கிறார். சின்னஸ்வாமி விபூதியோடு உள்ளே வருகிறார்.

தற்செயலாக கோசாலைக்குச் சென்ற பகவான் வாசலில் நடக்கும் கோலாஹலத்தில் ஈர்க்கப் படுகி றார். அப்படியே ஓர் அநுபவ கனத்தில் —வெளியே உறுத்திக் கொண்டு தெரியாத நுட்பமான கனத்தில் —அருகிருந்த திண்ணையில் அமர்ந்து விடுகிறார்.

பிரஸாதத்துடன் கூடிய ஆரத்தித் தட்டைப் பிரஸன்னரின் முன் நீட்டுகிறார் சின்னஸ்வாமி.

எந்த ஸம்ஸ்காரமும் தேவைப் படாத பிரஹ்ம ஞானி— வினையும் அகமும் நீற்றே போய் விட்ட அதிவர்ணாச்ரமி —தமது நீண்ட விரல்களால் பக்தி சிரத்தையுடன் திருநீற்றை எடுத்து விசாலமான திரு நெற்றியில் நீள இட்டுக் கொண்டார். ஏன், எதற்காக என்று எவரும் வாய்விட்டுக் கேளாத போதிலும் அவராகவே அப்போது வாய்விட்டு மெல் லச் சொல்லிக்கொண்டார்:

''அப்பாக்கு பிள்ளை அடக்கம்.''

அவர் சொன்னார் என்பதைவிட அந்த வார்த்தை களே அப்படிச் சொல்லிக் கொண்டன என்றுதான் கூறவேண்டும். இதயத்திலிருந்து விம்மி வந்த உணர்வே வாயிலே கம்மிப் பூஞ்சிதறலாக உதிர்ந் தது. நாத் தழுதழுக்கச் சொன்னார்: ''அப்பாக்கு பிள்ளை அடக்கம்.''

அப்பாவுக்கு இந்தப் பிள்ளை அபார அடக்கம் தான்! லோக ரக்ஷணை பக்தரக்ஷணை எல்லாமும் முழுக்க முழுக்க அந்த அப்பாவின் பொறுப்பே, அதிலே தலையிடவோ பங்கு பற்றவோ தமக்கு எந்த உரிமையுமில்லை என்ற உணர்வின் ஆச்சரியமான அடர்த்தியில், தம்மை வணங்கி வேண்டும் அடியா ருக்காகத் தம் கைதூக்கி ஆசிவழங்கியும் அறியாத வரல்லவா அவர்?

கைகுவித்தே நிற்கும் அதிசயத் தெய்வம் ஆஞ்ச நேயர் எனில் கைகுவித்தறியா பிரஹ்மஞானி நம் ரமணர். அவரே பக்தியின் பரம அடக்கத்தினால், தம் மிடம் கைகூப்பியவருக்காகக் கைதூக்கியதுமில்லை! அவரே இறைவனின் ஆசிதான். தனியே அவர் ஆசிகூறவும் வேண்டுமா?

பக்தியின் த்வைதம் வந்து விட்டால் அதில் தாரதம்யத்தின் லேசம் சற்று கூட்டியே ஈசன் விளையாடுகிறான் என்றேமல்லவா? இப்படித்தான் அவன் பிரம்மஞானிகளுக்குள்ளேயே சுகப் பிரம்ம மும் நம்மாழ்வாரும் சிவனிலும் நாராயணனை உயர்த்திப் பேசுபவர்களாகவும், மணிவாசகரும் அப்பைய தீக்ஷிதரும் நாராயணனைக் காட்டிலும் பர மேச்வரனை மேம்படுத்திப் பேசுவோராகவும் இருக்கச் செய்தான்.

நம் ரமணரையோ சிவபெருமானுக்குள்ளேயே நடராஜனை விட அண்ணாமலையாரை உயர்த்திப் பேச வைத்தான்!

புண்டரீகபுரம் என்பதாகப் பெயர் பெற்ற சிதம்பரமே விச்வ வடிவான விராட் புருஷனின் இதய கமலம் (ஹ்ருத் புண்டரீகம்) என்பது ஆன்றோர் பலரின் அநுபவமாயினும், ரமணருக்கோ ஈசன் அண்ணாமலையையே உலகத்தின் இதயமாகக் காட்டிக் கொடுத்தான். ஸாதகன் தனது தேகத்தின் இடப்பக்கத்தே உள்ள பௌதிக இதயத்துக்கு நேராக வலப்பக்கத்திலிருக்கும் ஆன்மிக இதயத் தில் ஒடுங்க வேண்டும் என்பதாக, ஸத்யமான ஹ்ருதய ஸ்தானத்தை ஸ்பஷ்டமாகக் கண்டு இயம் பியவர் ஸ்ரீ ரமணர். அவர் விச்வ இதயமாக அருணாசலத்தைக் கருதினாரெனில் அதுவேதான் ஆண்டவன் அவருக்குத் தந்த மெய்யான அநுபவம் என்பதில் ஐயமும் உண்டோ?

"ஆயிரத்து தொள்ளாயிரத்துப் பதினாலோ பதினைஞ்சோ, சிதம்பரத்து தீக்ஷிதர் ஒருத்தர் என்னைப் பற்றிக் கேள்விப்பட்டு இங்கே வந்தார்" என்று சுமார் முப்பத்தைந்தாண்டுகளுக்குப்பின் ஒருநாள் பகவான் ஆச்ரம அடியார்களுக்குக் கதை சொல்ல ஆரம்பித்தார்.

''அது நான் விருபாக்ஷ குகையில் இருந்த காலம். அந்த தீக்ஷிதர் டவுனில் தங்கிக்கொண்டு தினந்தோறும் என்னைப் பார்க்க விருபாக்ஷிக்கு வந்து கொண்டிருந்தார். ஒவ்வொரு தடவையும் அவர் வருகிறபோது ஊர் ஸமாசாரம் எல்லாம்

என்னென்னவோ பேசினாலும், முடிவாக ஒன்றைத் தான் தவறாமல் சொல்வார். அதாவது, 'பஞ்சபூத லிங்கங்களில் சிதம்பரத்திலேதான் ஆகாச லிங்கம் இருக்கிறது. அதனால் (ஞான மார்க்கத்தில் இருக்கும்) நீங்கள் சிதம்பரத்துக்குக் கண்டிப்பாக வர வேண்டும்; நடராஜாவை தரிசனம் பண்ண வேண்டும்' என்கிற பல்லவியை மட்டும் அவர் விடாமல் பாடி வந்தார்.

''அப்போதுதான் ஒருநாள் 'அசலனே ஆயினும் அச்சலை தன்னில்'* என்று ஆரம்பிக்கிறதே, அந்த வெண்பாவை எழுதினேன். அவர் வழக்கம்போல் சிதம்பரத்தைப் பற்றி ஆரம்பித்தவுடன் இந்தப் பாட்டைக் காட்டினேன். 'அப்பா அசைவில்லாத அசலன்தான் என்றாலும் அந்தச் சிதம்பரக் கனக ஸபையில் ஹிமாசலத்தின் பெண்ணான அம்மாவுக்கு எதிராக ஏக ஆட்டம் ஆடுகிறாரே! இங்கே இந்த அருணாசலத்தில்தான் அந்த சக்தியும் அவருக்குள்ளேயே ஒடுங்கி விட்டதால் அசைவில்லாத நிலைக்கு உயர்ந்த ரூபமாக அண்ணாமலை ரூபத்திலேயே இருக்கிறார்' என்பது பாட்டுக்கு அர்த்தம். ஆகாசம் தேயுவைவிட உத்தமம் என்று சொன்னாலும் இங்கே தேஜோலிங்கமாக இருக்கிற அருணாசலம் தான் அசைக்க முடியாததாக இருந்து கொண்டு நிச்சலன பிரம்மத்துக்கு ரூபமாயிருக்கிறது; ஆகாச க்ஷேத்ர நடராஜா மிகவும் சலனத்துடன் ஆடுகிறவர்தானே?

''பாட்டைப் பார்த்த தீக்ஷிதர் புரிந்து கொண்டு விட்டார். அதற்கப்புறம் அவர் நான் சிதம்பரத்துக்கு வந்தாக வேண்டும் என்று வற்புறுத்துவதை விட்டு விட்டார்.''

அசலப் பிரம்மம் அருணாசலத்தில் மட்டுந்தான் இருக்கிறதென்பதில்லை; அகிலாண்ட முழுதிலும், அதைக் கடந்தும் அதுவே உள்ளது என்பதை நம்மைவிட வெகு அழுத்தமாகக் கண்டு கொண்ட மாஞானிதான் இப்படிப் பேசுகிறார். ''அப்பா'' தன்னுடைய ''அப்பாத்துவ''த்தை அருணையிலேயே காட்டிக் கொண்டதில் ஏற்பட்ட பிரேமை இன்பத்துக்காக ஞானத்தைக் கொஞ்சம் மூட்டை கட்டி வைத்து விட்டு இப்படிப் பேசுகிறார்.

அப்பாவையே சொன்ன ரமணரை ஸ்கந்த அவதாரமென்பார்கள். தந்தைக்கு அடங்காத சிங்கக்குட்டி சிங்காரவேலன். அவன் அப்பாவைக் கை கட்டி வாய் புதைக்கச் சொல்லி உபதேசமே செய்தவன். பழம் தராததற்காக அவரிடம் சினந்து தண்டபாணியாகக் கிளம்பியவன். துறவியாகப் போகிறானே என்று அவனைத் தொடர்ந்து துக்கித்து ஓடினர் தாயும் தந்தையும். அவனே இப்போது ''அப்பாக்குப் பிள்ளை அடக்கம்'' என்று பரம ஸாதுவாக வந்தான். ஸுந்தரேச்வரனை இருக்கிற இடம் தெரியாமல் செய்துள்ள மதுராபுராதீச்வரி இந்த சாதுப்பிள்ளையைத் துறவியாக்கி, தானே தூக்கி, தன்னை இருக்குமிடம் தெரியாமல் ஒடுக்கிக்கொண்டு விட்ட அருணாசலேச்வரனிடம் அனுப்பி வைத்து விட்டாள்.

அப்புறம் அந்த அப்பாவே அப்பா என்று ரமணர் இருந்தாலும், மீனம்மாவையும் நினைக்கும் போதெல்லாம் நெஞ்சு அஸ்காவாக உருகி விடுவார். அனைத்தையும் ஒன்றாக உணர்ந்தவர் தம்முடைய பக்தி அன்பிலே அருணாசலம், அடுத்தாற்போல் மீனாம்பிகை, மூன்றாவதாக தமது ஜன்மஸ்தலத்துத் தெய்வங்களான பூமிநாதர் — ஸஹாயவல்லி என்று விசேஷமாக ருசித்தது ஒரு அதிசயம்தான்.

அப்பாவே அப்பா என்னும்படியாக அம்மா தன்னை அண்ணாமலையப்பன் விழுங்கி விட விட்டாளே, அந்தக் கதையை அவர் வாய்மொழியாகவே அடுத்த இதழில் கேட்போம்.

சிதம்பரத் தொடர்புள்ள விஷயம் இங்கே இன்னொன்று பார்க்கலாம். பகவானின் பார்ஷதராக நீண்ட காலம் நெருங்கிப் பணி செய்தவரும், பக்குவியும், உயர் பண்பினருமான பூஜ்ய ஸ்ரீ குஞ்சு ஸ்வாமிகள் ரமண ஆகாச கங்கையில் நீராடித் திரட்டிய கொத்துக் கொத்தான தாரகைகளில் சுடரான ஒரு விஷயம். நடராஜ க்ஷேத்ரமான சிதம்பரத்துக்கு என்றே ஆக்கிய நடராஜ விக்ரஹம்தான் அருணாசல ஆலய ஆடவல்லான் ஸந்நிதியில் இருப்பது என்றும் அண்ணாமலைக்கென உத்தேசித்த கூத்தப்பிரான்

---

* அசலனே யாயினு மச்சலை தன்னி
  லசலையா மம்மையெதி ராடு—மசல
வுருவிலச் சத்தி யொடுங்கிட வோங்கு
  மருணாசலமென் றறி

மூர்த்தம்தான் தில்லையம்பலத்தில் இடம் பெற்றிருப்பது என்றும் பகவான் கூறியிருக்கிறாராம்!

அவர் என்னதான் அண்ணாமலையானை ஒருபடி உயர்த்திச் சொலலட்டும்; அவரே ஒரு விஷயத்தில் தில்லைநாயகனாகத்தான் இருந்திருக்கிறார்.

நடராஜாவுக்கு என்ன விசேஷம்? தரிசனம் தருவது. திருவாதிரை விழாவை 'தரிசனம்' என்றே சொல்வார்கள். பார்க்க முத்தி பார் புகழ் தில்லையில்: ''தர்சனாத் அப்ரஸதஸி'' என்பார்கள். தவயோகியரும் எட்ட முடியாத வெட்ட வெளியான அப்ரஸதஸே—ஆகாய லிங்கமே—பாமரரும் பார்த்துப் பார்த்து இன்புற நேத்ரானந்த நடராஜனாக நின்றதுதான் கருணையின் பெருமை. அப்பெருமைக்கு உருவாகவே நூறு ஆண்டுகளுக்கு முன் அவதரித்த ஆகாச ரமணரும் தரிசன மாத்திரத்தில் பார்ப்போரின் மனக்குமுறலையும் சலனத்தையும் சமனம் செய்யும் தமது திவ்ய ரூபத்தை எவரும் எக்காலும் காணும்படியாக இருந்தவர். இதற்காகப் பிடிவாதமே பிடித்தவர்.

ஆம், தமக்கென்று தனியறையே இன்றி எல்லார்க்கும் பொதுவில்' எப்போதுமே இருந்த, வரல்லவா? உண்பது, உறங்குவது எல்லாம் அனைவர் கூடவும்தான்! ரண சிகித்ஸை நடந்த தினத்திலும் கூடத் தம்மை மக்கள் தரிசிப்பதைத் தடுக்கக் கூடாது என்று அடம் பிடித்து ஜயித்தவர் அவர்! ஏன், அவரது வெளி மூச்சு உள் மூச்சில் ஒடுங்கி அவர் அகண்ட ஆகார விருத்தியில் உடல் விட்டு நிறைந்த அந்த வினாடிகூட அவரைத் தரிசிப்போர் வரிசையாகச் சென்று கொண்டேதான் இருந்தார்கள்.

அகக் கண்ணில் என்றும் தரிசிப்போம் நடனம் செய்யாத இந்த நடராஜனை!

## வசுமன்னன் வழிபாடு

காஞ்சி மன்னன் வசுமான். அவன் காசி யாத்திரை சென்று நாடு திரும்பினான். அதற்குள் பகைவர் அவனது நாட்டைக் கைப்பற்றிக் கொண்டனர்.

அரசன் மனம்வருந்தி, சாபாலி முனிவரை அடைந்தான். நாட்டைத் தான் இழந்த காரணத்தை அவரிடம் வினவினான். முனிவர் அவன் செய்த தீங்கைப் பின்வருமாறு கூறினார் :

''அரசனே! நீ முற்பிறப்பில் பெருஞ்செல்வன்; வணிகன்; பல பண்டங்களும் விற்கும் தொழில் உடையவன். உன் வீட்டின் பக்கத்தில் ஓர் அந்தணன் இருந்தான். அந்தணன் உன்னிடம் அரிசி முதலிய பொருளை விலைக்கு வாங்குவான். மாதம் ஒருமுறை அவற்றின் மொத்தத் தொகையை உன்னிடம் செலுத்தி வந்தான். நீ அவன் வாங்கும் பொருள்களின் விலையை மட்டும் எழுதிவைத்து மாதந்தோறும் அவன் கொடுக்கும் தொகையை மட்டும் எழுதாமல் விட்டாய். இவ்விதம் ஐம்பது ஆண்டுகள் ஆயின. அந்தணன் காலம் முடிந்து இறந்தான். அவன் மனைவியும் இறந்தாள். அவர்களுக்குச் சிறிய வயதுடைய நாலைந்து பிள்ளைகள் இருந்தார்கள். அந்தப் பிள்ளைகளை அரசவைக்கு இழுத்துச் சென்று, வரவு இல்லாத கணக்கைக் காட்டி, அந்த பிள்ளைகளின் வீடு மற்ற பொருட்கள் எல்லாவற்றையும் கைக்கொண்டாய். அந்தப் பாவம் இப்போது உனக்குப் பலன் தருவதாயிற்று. அந்தக் காலத்தில் சிவபெருமானுக்கும் சிவனடியார்களுக்கும் சில பொருட்களைக் கொடுத்தாய். அந்தப் புண்ணியப் பயனால் இந்தப் பிறப்பில் அரசனாக இருந்து உலகை ஆட்சி புரிந்தாய். நீ அசுவமேத யாகம் புரிந்தால் பாவம் ஒழிந்து, இழந்த நாட்டை மீண்டும் பெறுவாய்'' என்று முனிவர் மன்னனிடம் தெரிவித்தார்.

மன்னன், ''பொருள் இல்லாத நிலையில் நான் எப்படி அசுவமேத யாகம் செய்வேன்?'' என்றான். ''நீ திருவிடைமருதூர் அடைந்து அசுவமேதப் பிரதட்சிணம் வந்தால் இந்தப்பழியும் தீரும்'' என்றார் முனிவர்.

முனிவர் கூறியபடியே மன்னன் திருவிடைமருதூர் சென்றான். அங்கு அவன் பிரதட்சிணம் செய்து இறைவனை மனமுருக வழிபட்டான். அது காரணமாக வலிமைபெற்றுத் தனது நாட்டை மீண்டும் வென்றான். அவன் இறைவனுக்கு மார்கழித் திருவாதிரைத் திருவிழாவைச் சிறப்புற நடத்தி வைத்தான்.

— திருவிடைமருதூர் தல வரலாறு




# பிரம்ம உபநிஷதம்

பிரம்மோபநிஷத்தின் கருத்துக்கள் ஆங்காங்கே சில விளக்கங்களுடன் இங்கே தரப்பெறுகின்றன.

உடலில் உறையும் இந்தப் புருஷனுக்கு முக்கியமான இடங்களாக நான்கு இருக்கின்றன. அவை முறையே கொப்பூழ், இதயம், கழுத்து, உச்சி ஆகியவையாகும். இவற்றில் நான்கு பாதங்களை உடைய பிரம்மம் பிரகாசிக்கிறது. அதாவது விழிப்பில் பிரம்மாவும், கனவில் விஷ்ணுவும், உறக்கத்தில் ருத்திரனும், அதற்கு அப்பாலுள்ள நான்காவது நிலையாகிய துரியத்தில் அக்ஷரப் பிரம்மமும் பிரகாசிக்கிறார்கள். அந்தப் பரம புருஷனே சூரியனும், எங்கும் வியாபித்த விஷ்ணுவும், உலகையாளும் ஈசுவரனும் ஆவான். அவன் மனதில்லாமல் நினைப்பவனாகவும், காதில்லாமல் கேட்பவனாகவும், கைகால்களில்லாமல் செயல் புரிபவனாகவும் சுயஞ்சோதி சொருபமாக உள்ளவன் என்று ஒப்புக்கொள்ளப்பட்டவன்.

எங்கு உலகம் உலகமாக இல்லையோ, தேவர்கள் தேவர்களாக இல்லையோ, யஜ்ஞங்கள், யஜ்ஞங்களாக இல்லையோ, தாய் தாயாக இல்லையோ தந்தை தந்தையாக இல்லையோ, மருமகள் மருமகளாக இல்லையோ, சண்டாளன் சண்டாளனாக இல்லையோ, துறவி துறவியாக இல்லையோ, தவசி தவசியாக இல்லையோ, எல்லாம் ஒன்றேயான பரப்பிரம்மமாக விளங்குகிறதோ அதுவே 'நிர்வாணம்' என்ற நிலையாகும்.

அங்கே தேவர்களோ ரிஷிகளோ பிதிருக்களோ இல்லை. உலகக் கனவிலிருந்து விழித்துக்கொண்ட ஞானி அங்கே சர்வ வல்லமையுடன் விளங்குகிறான் அவன் எல்லாம் அறிந்தவன்.

எல்லாத் தேவதைகளும் இதயத்தில் இருக்கிறார்கள். பிராணன்கள் இதயத்தில் நிலைபெறுகின்றன. இதயத்தில்தான் உயிர்நிலையும் ஞானஒளியும் இருக்கின்றன. அதுதான் முப்புரிப்பூணூல் என்று ஞானிகள் அறிகிறார்கள். பரமாத்மாவே தெய்வமாகவும் பிராணனாகவும் அறிவாகவும் எல்லோருடைய உள்ளத்திலும் விளங்குகிறது. (இதைக் குறிப்பிடுவதற்காகத்தான் மூன்று இழைகளைக் கொண்ட பூணூல் அணியப்படுகிறது.)

பரிசுத்தம் அளிக்கக் கூடியவற்றுள் சிறந்ததும் ஆதியில் பிரம்மா தோன்றும்போதே அவருடன் தோன்றியதும், ஆயுளையும் முதன்மையையும் அளிக்க வல்லதுமான வெண்மையான பூணூலைத் தரிக்கிறேன். ஞானஒளியும் பலமும் அதனால் நிலைபெற வேண்டும். [இது யஜ்ஞோபவீதம் புதிதாகத் தரிசிக்கும்போது உச்சரிக்க வேண்டிய மந்திரமாகும்.]

குடுமியுடன் தலைமயிரை மழித்து வெளிப் பூணூலை ஞானி விலக்கிவிட வேண்டும். அந்த ஞானி எது அழியாத பரப்பிரம்மமோ அதைச் சூத்திரம் எனப்பட்ட பூணூலாகத் தரிக்க வேண்டும். [அதாவது- வெளிப்படையான பூணூலை விட்டுவிட்டுப் பிரம்ம பாவனையாகிற பூணூலை ஞானியாகிய துறவி அணிகிறான். அந்தப் பூணூல் ஒருபோதும் அசுத்தமாகப் போகாது. நூலில் மணிகள் கோர்க்கப்பட்டிருப்பதைப் போல, பிரம்மத்திடம் உலகம் முழுவதும் கோர்க்கப்பட்டிருப்பதால் பிரம்மம் சூத்திராத்மா எனப்படும். 'சரட்டில் மணிநிரைகள் போல இது

அனைத்தும் என்னிடத்தில் கோக்கப்பட்டுள்ளது' என்று கீதை குறிப்பிடுகிறது.]

சூசனை செய்வதால் அதாவது சுட்டிக் காட்டுவதால் அதைச் சூத்திரம் என்று சொல்கிறார்கள். சூத்திரம் குறிப்பிடுவது ஒப்புயர்வற்ற பரமபதமே ஆகும். அந்தச் சூத்திரம் எவனால் அறியப்படுகிறதோ அவனே வேதத்தின் கரைகண்ட பிராம்மணன் ஆவான்.

சரட்டில் மணிகள் போன்று இந்த அனைத்தும் எதில் கோக்கப்பட்டுள்ளதோ, அந்தச் சூத்திரமாகிய சரட்டை, யோகத்தை அறிந்தவனும் உண்மையைக் கண்டவனுமாகிய யோகி தரித்துக் கொள்ளட்டும்.

சிறந்த யோகத்தில் நிலைபெற்ற ஞானி, வெளிப்படையான பூணூலை விட்டுவிடட்டும் பிரம்ம பாவனையாகிய இந்த நூலை எவன் தரிக்கிறானோ அவன்தான் அறிவாளி ஆவான்.

அந்தப் பூணூலை அணிந்தால் அது எச்சிலாகவோ அசுத்தமாகவோ போகாது. ஞானம் என்ற பூணூலை அணிந்த எவருடைய சூத்திரம் உள்ளே போய்விட்டதோ, அவர்களே உலகில் சூத்திரத்தின் ரகசியத்தை உணர்ந்தவர்கள் ஆவர். அவர்களே உலகில் உண்மையான பூணூல் அணிந்திருக்கிறார்கள்.

ஞானமே சிகையாகவும், ஞானமே பூணூலாகவும் உடையவர்கள். ஞானத்தில் நிலைபெற்றவர் ஆவர். அவர்களுக்கு ஞானத்தைவிட உயர்ந்தது ஒன்றுமில்லை. ஞானம்தான் புனிதத்தன்மை அளிப்பதாகச் சொல்லப்படுகிறது.

அக்கினியைப் போன்ற ஞானசிகை அல்லாது மற்றது சிகையாகாது. எவனுடைய சிகை ஞானமயமாக விளங்குகிறதோ, அந்த அறிவாளியே சிகை உடையவனாகச் சொல்லப்படுவான்; கேசத்தைத் தரிக்கும் மற்றவர்கள் அல்லர்.

வைதிகக் கர்மங்களில் அதிகாரமுடையவர்களால் கர்மத்திற்கு அங்கமாக இந்தப் பூணூல் அணியப்பட வேண்டும் என்பதுதான் தர்ம சாஸ்திரத்தில் சொல்லப்பட்டதாகும்.

எவனுடைய சிகை ஞானமயமானதோ, அது போலவே பூணூலும் ஞானமயமாக விளங்குகிறதோ அவனுக்குப் பிராம்மணத்துவம் முழுவதும் சித்திக்கும் (வேதம் முழுவதிற்கும் அதிகாரம்) என்று வேதத்தை அறிந்தவர்கள் கூறுகிறார்கள்.

தெய்வம் ஒன்றே, அது எல்லா உயிர்களுக்குள்ளும் மறைந்திருக்கிறது. எங்கும் நிறைந்திருக்கிறது, எல்லா உயிர்களுக்கும் அந்தராத்மா, எல்லாச் செயல்களையும் மேற்பார்வை செய்வது, எல்லாப் பொருள்களுக்கும் அடிப்படையாய் வசிப்பது, சாட்சியாக இருப்பது, அறிவாக இருப்பது, தான் தானாக விளங்குவது, குணங்களைக் கடந்தது என்று காண்பதே ஞானமாகும்.

எல்லா உயிர்களுக்கும் அந்தராத்மாவாகவும் அனைத்தையும் தன் வசத்தில் வைத்துக் கொண்டிருப்பவனாகவும் உள்ள ஒருவனும், தனது ஒரே வடிவத்தைப் பலவாகச் செய்பவனாகவும் உள்ளவன் எவனோ, அந்த ஈசுவரனைத் தங்கள் உள்ளத்திலேயே இருப்பவனாக எந்தத் தீரர் தொடர்ந்து காண்கிறார்களோ, ஞானசித்தி எய்திய அவர்களுக்கே அழியாத சுகம் உண்டு, பிறருக்கு இல்லை;

ஆத்மாவைக் கீழ் அரணியாகவும், பிரணவம் என்ற ஓங்காரத்தை மேல் அரணியாகவும் செய்து கொண்டு, தியானம் என்னும் கடைதலை அப்பியாசம் செய்து, மறைந்திருந்த அக்கினியை வெளிக் காண்பது போலப் பரமாத்மாவைக் காண வேண்டும்.

சத்தியத்தாலும் தவத்தாலும் எவன் தொடர்ந்து பார்க்கிறானோ அவனுடைய உள்ளத்தில் எள்ளில் மறைந்திருந்த எண்ணெய் போலவும், தயிரில் இருந்த வெண்ணெய் போலவும், ஆற்றில் இருந்த நீர் போலவும், அரணிக் கட்டைகளில் இருந்த நெருப்புப் போலவும் (ஆத்ம சாதனைகளின் பயனாக மறைந்திருந்த) ஆத்மா வெளித்தோன்றுகிறது.

சிலந்திப்பூச்சி எவ்விதம் நூலை உண்டாக்கி மீண்டும் தனக்குள்ளேயே இழுத்துக் கொள்கிறதோ அவ்விதமே ஜீவன் விழிப்பிலும் உறக்கத்திலும் வெளியுலகிற்கு வருகிறான், மீண்டும் திரும்பி உள்ளே போகிறான்.

ஜீவன் 'ஜாக்ரத்' என்ற விழிப்புநிலையில் கண்ணில் இருப்பதாகவும், கனவுநிலையில் கழுத்தில் உறைவதாகவும், ஆழ்ந்த உறக்கத்தில் இதயத்தில் உள்ளதாகவும், துரீயத்தில் தலையுச்சியில் நிலை பெற்றதாகவும் அறிய வேண்டும்.

எந்த நிலையை எட்டிப் பிடிக்க முடியாமல் மனதுடன்கூட வாக்கும் திரும்பிவிடுகிறதோ, அதுதான் ஜீவனுடைய பரிபூரண ஆனந்த நிலையாகும். அதை உணர்ந்து புத்திமான் முக்தனாகிறான்.

பாலில் வெண்ணெய் போல எங்கும் வியாபித்திருக்கும் ஆத்மஞானத்தாலும் தவத்தின் மூலமாகவும் ஆத்மாவை அறிய வேண்டும். அதுதான் பிரம்மோபநிஷத்தால் அடைய வேண்டிய பதவி. அதுவேதான் பிரம்மோபநிஷத்தால் அடைய வேண்டிய பதம் என்று கூறி, பிரம்மோபநிஷதம் நிறைவு பெறுகிறது.

*

அருள்நெறிக் கதை



# இறைவனது திருவடிகளைச் சேரும் வழி

சரஸ்வதி

திருமாலின் திருவுருவமே அழகானது. அத்தகைய அழகருக்கு அழகு செய்தது போல் அவரது திருமேனி முழுவதையும் முத்துக்களாலும் சிறந்த ரத்தினங்களாலும் மாணிக்க மணிகளாலும் செய்த ஆபரணங்களால் அலங்கரித்து, விலையுயர்ந்த பட்டாடைகளையும் அணிவித்து, வாசனை மிக்க மலர் மாலைகளையும் அணிவித்து, அவரது திருவுருவத்தின் திருவடிகளில் தன் சென்னியைத் தாழ்த்தி எழுந்து நின்று கண் இமைக்காமல் அந்தப் பேரெழிலைப் பருகி நின்றான் காஞ்சி மன்னன். அவனது மனம் "நான் செய்த பெரும் பேறுதான் என்ன! பகவான் விஷ்ணு என்னை மன்னனாக்கி என் மனம் முழுவதையும் பக்தியால் அல்லவா நிரப்பியிருக்கிறார்!" என்று நினைத்து இறுமாந்திருந்தது.

காஞ்சி மன்னன், திருப்பாற்கடலில் பள்ளி கொண்ட நிலையில் திருமாலின் விக்கிரகம் ஒன்றைச் செய்வித்தான். அதற்கு அவன் நாள்தோறும் பல வித அலங்காரங்களைச் செய்வித்து, சுவைமிக்க உண்டிகளையும் பழ வகைகளையும் படைத்து வந்தான். இத்தகைய சிறந்த வழிபாட்டிற்கு இணையாகச் சொல்லும் வகையில் இந்த உலகிலேயே எவரும் இருக்க முடியாது என்று செருக்குடன் அவன் அனைவரையும் நோக்குவது வழக்கம்.

இவ்விதம் இருந்தபோது ஒரு நாள் அரசன் உலாவச் சென்றான். அவன் திரும்பி வரும் வழியில் யாரோ ஒருவர் ஒரு மரத்தடியில் அமர்ந்து கண்களில் நீர் மல்க, துளசி மாலையை அணிந்த ஒரு விக்கிரகத்திற்குத் துளசி தளங்களை அர்ச்சித்தபடி அமர்ந்திருந்தார்.

அரசன் விஷ்ணு பக்தன் அல்லவா? உடனே அங்கேயே நின்று அவரைக் கூப்பிட்டான். "இங்கே என்ன செய்துகொண்டிருக்கிறாய்? விஷ்ணுவின் விக்கிரகத்தை நான் எவ்வளவு அழகாக அலங்கரித்திருக்கிறேன் என்று வந்து பார். அழகிய ஆடைகளால் அலங்கரிப்பதை விட்டு, வெறும் துளசிமாலையை மட்டும் சார்த்தி என் அண்ணலை அலங்கோலப்படுத்தி விட்டாயே!" என்றான்.

அரசன் செல்வச் செருக்குக் காரணமாகத் தன் வார்த்தைகளால் ஓர் ஏழைப் பக்தரான விஷ்ணு தாசரின் மனதை நூறு சுக்கல்களாக உடைத்து விட்டான். அரசன் எங்கே! அன்றாடங்காய்ச்சி எங்கே! மலைக்கும் மடுவுக்கும் எப்படிப் பொருந்தும்?

பகவானிடம் பக்தி செலுத்துவது ஒன்றையே முக்கியமாகக் கருதிய விஷ்ணுசித்தர், "அரசே! பகவானைப் பூஜிப்பதற்கு இதயத்தில் நிரம்பிவழியும் பக்தி என்ற மலரைவிடச் சிறந்தது வேறு ஒன்றும் கிடையாது. பொன்னும் மணியும் கொண்டு இறைவனை அளந்துவிட முடியாது. பகவானை உண்மையான பக்தி ஒன்றாலேயே அடைந்துவிடலாம். அத்தகைய பக்தி ஒன்றையே பிரார்த்தித்து நான் பகவானை வழிபட்டு வருகிறேன்" என்று சொன்னார். பிறகு அவர் மீண்டும் தம்போக்கில் விஷ்ணுஸூக்தத்தைத் தமது தேன்மதுரக் குரலோடு இழைத்துப் பாடம் செய்வதில் முனைந்தார்.

இதைக் கேட்ட அரசன் வெகுண்டான். "அந்தணனே! உன் பக்தியின் மகிமையைப் பார்த்து விடுகிறேன்! நான் முதலில் பகவானைப் பார்க்கிறேனா, நீ முதலில் பார்க்கிறாயா என்பதைப் பார்த்து விடலாம்" என்று சூளுரைத்தான். அந்தணர் எதையும் பொருட்படுத்தவில்லை. காஞ்சி மன்னனும் ஆத்திரத்துடன் அரண்மனையை அடைந்தான்.

சில நாட்கள் சென்றன. மன்னன் முத்கல மகரிஷியை வரவழைத்தான். பகவானைத் தரிசிப்பதற்காக மிகுந்த பொருட்செலவில் விஷ்ணு யாகத்தைத் தொடங்கினான். நகரின் அலங்காரமும்,

அந்தணர்களின் வேத ஒலியும், யாகத்தின்போது அளிக்கப்படும் தானங்களும் தட்சிணைகளும் அனை வரையும் காஞ்சியை நோக்கி ஈர்த்தன. எங்கே பார்த்தாலும் மக்கள் கூடி அரசனின் இத்தகைய சிறப்பு மிக்க பக்தியையே பாராட்டிப் பேசினார்கள்.

இங்கு ஏழை அந்தணரும் 'க்ஷேத்திர சன்னியாசம்' என்ற ஒரு வகைத் துறவை மேற்கொண்டார். அனந்தசயனத் தீர்த்தத்திலேயே அவர் தங்கி, பக வான் விஷ்ணுவை ஆராதித்து, விரதம், உபவாசம் ஆகிய அனுஷ்டானங்களைச் செய்து வந்தார். அவர் ஒரு சபதத்தை ஏற்படுத்திக்கொண்டிருந்தார். அதன்படி பகவானின் தரிசனம் கிடைத்தால் அன்றி அவர் காஞ்சி திரும்பக் கூடாது. அவர் தம் நிபந்தனை நிறைவேறும் வரை பகலில் ஒரு முறை தன் கையால் உணவு தயாரித்து அதைப் பகவா னுக்குப் படைத்த பிறகு உண்டு வந்தார். ஒரு நாள் இவ்விதம் வழக்கம்போல் உணவு தயாரித்தார். அதைப் பகவானுக்குப் படைப்பதற்காக எடுத்துச் செல்ல வந்து பார்த்தால், தயாரிக்கப்பட்ட உண வைக் காணவில்லை!

இது போலவே ஒரு வாரம் உணவு தொடர்ந்து திருட்டுப் போயிற்று. மறு முறை உணவு தயாரிப் பதில் நேரத்தைச் செலவிட்டால் பகவானை வழிபடும் நேரம் குறைந்துவிடும் என்று கருதிப் பட்டினியா கவே விஷ்ணுசித்தர் பஜனை செய்யக் கிளம்பிவிடு வார். ஏழாவது நாள், இந்த உணவுத் திருட்டு எப் படி நடைபெறுகிறது என்பதைக் கண்டு பிடிக்கத் தீர்மானித்தார். எனவே உணவைத் தயாரித்த பின் அதை மூடிவைத்துவிட்டு ஒரு மறைவிடத்தில் அமர்ந்து கவனிக்க ஆரம்பித்தார்.

அவர் உணவை வைத்துச் சென்றுவிட்டார் என் பதை நிச்சயம் செய்துகொண்டு அங்கே ஒரு சண் டாளன் வந்தான். அவன் வறுமையால் வாடுகிறான் என்பதை ஒரே விநாடியில் தெரிந்துகொள்ளலாம். ஒல்லியாக ஒடிந்து விழுவது போன்ற உடல். அழுக் கேறிய கிழிந்த கந்தல் உடை, பரட்டைத் தலை. சுற்று முற்றும் பார்த்த சண்டாளன் யாரும் இல்லை என்று நினைத்து, சமைத்த உணவை அள்ளிக் கொண்டு ஓடத் தலைப்பட்டான்.

இந்தக் காட்சியைக் கண்ட ஏழை விஷ்ணுசித்த ரின் மனம் அனலில் இட்ட மெழுகுபோல் உருகியது. அவனிடம் இரக்கம் கொண்ட அந்தணர் ஒரு பாத் திரத்தில் சிறிது நெய்யை எடுத்துக்கொண்டு அவன் பின்னால் ஓட ஆரம்பித்தார். பின்னால் தன்னைத் தொடர்ந்து வரும் ஆள் சப்தத்தைக் கேட்ட சண் டாளனும் வேகமாக ஓடத் தலைப்பட்டான். அவ னால் ஓட முடியவில்லை. கல் தடுக்கிக் கீழே விழுந்து மூர்ச்சையடைந்தான். அந்தணரும் ஓடோடி வந்து, அவன் அருகே அமர்ந்து, தன் மேல்துண்டை எடுத்து விசிறி அவனை ஆசுவாசப்படுத்தினார்.

அவ்வளவுதான், "அப்பனே! உனக்கான தேர்வு முடிந்துவிட்டது. நீ வெற்றி பெற்றுவிட் டாய்!" என்று கூறியபடி, சண்டாளன் இருந்த இடத்தில் சங்கு சக்கரக் கதை பீதாம்பரம் ஆகிய வற்றோடு கூடிய திருமால் புன்னகையுடன் விஷ்ணு சித்தருக்குக் காட்சியளித்தார். திருமாலின் தரிச னம் கிடைத்த விஷ்ணுசித்தர் பேச்சற்றுப்போய் கல்லெனச் சமைந்து போனார். இத்தகைய நிலை யில் அவர் விஷ்ணுவை நமஸ்கரிக்கவும் மறந்தார். பகவான் விஷ்ணுசித்தருக்குத் தன் தரிசனத்தை யும் அளித்து விமானத்தில் ஏற்றி அவரை வைகுண் டம் அனுப்பி வைத்தார். தேவர்கள் புஷ்ப மாரி பொழிந்தனர். கந்தர்வர்கள் பாடினர். அப்ஸரஸ் ஸ்திரீகள் ஆடினர்.

இங்கே விஷ்ணுயாகம் நடந்துகொண்டிருந்தது. திடீரென்று அரசன், "மகரிஷி! நிறுத்துங்கள் யாகத்தை!" என்று முழு மனதுடன் வேள்விக் காரி யத்தில் ஈடுபட்டிருந்த முத்கல மகரிஷியின் கவனத் தைத் திருப்பினான். காரணம் என்ன? மன்னனின் கண்களில் விஷ்ணுதாசர் வைகுண்டம் செல்லும் விமானம் பட்டதுதான். பிறகென்ன? "பக்தி தான் பகவானை அடையச் சிறந்த வழி" என்பது மன்னனுக்குப் புலனாயிற்று. உடனே அவன் தன் அரச உடைகளைக் களைந்து வீசி எறிந்தான். பக வான் விஷ்ணுவை நினைத்துக் கண்ணீர் விட்டுக் கதறியபடியே யாககுண்டத்தில் எவரும் தடுக்கு முன் குதித்துவிட்டான். உடனே விஷ்ணுபகவான் அவனுக்கும் காட்சியளித்து வைகுண்டம் அழைத் துச் சென்றார்.

இவ்விதம் பத்மபுராணத்தில் உத்தரகாண்டத்தில் பக்தியின் சிறப்பை விளக்கும் ஒரு சிறுகதை வரு கிறது. ★





# யோகவாசிட்ட சாரம்

திரட்டும் தமிழும் : கேப்டன் நாகசுப்பிரமணியன்

யோகவாசிட்டம் அல்லது யோகவாசிட்ட இராமாயணம் என்று புகழ் பெற்றுள்ள நூல் 32,000 சுலோகங்களில் வால்மீகி முனிவரால் இயற்றப் பட்டதாகும். இந்த நூலில் வசிட்ட மகரிஷி ஸ்ரீராமபிரானுக்கு அழகிய உதாரணங்களின் மூலமாகவும் கதைகளின் மூலமாகவும் அத்வைத வேதாந்தக் கருத்துக்களைக் கூறியுள்ளார்.

சில நூற்றாண்டுகளுக்கு முன்பு காஷ்மீரப் பிரதேசத்தில் வாழ்ந்த அபினந்த பண்டிதர் என்ற சமஸ்கிருதப் பேரறிஞர், யோகவாசிட்ட மூலநூலின் கருத்துக் குறையாமல் சுருக்கமாக 'லகு யோக வாசிட்டம்' என்ற பெயரில் ஒரு நூலை வெளியிட்டார். அந்த நூலில் இடம் பெற்றுள்ள சில கருத்துக்கள் கீழே தரப் பெறுகின்றன.

* * *

1. ஓ ராமா, ஒரு படகோட்டி கொந்தளிக்கும் கடலில் தன் படகை மிகவும் சாமர்த்தியமாகச் செலுத்துகிறான். அதுபோலவே உலக வாழ்க்கையில் உழல்பவர்கள் மகான்களின் தொடர்பினாலும் உபதேசங்களினாலும் சம்சாரமாகிய கடலை மிகவும் சாமர்த்தியமாகத் தாண்டுகிறார்கள்.

2. மகான்களின் சத்சங்கம் வாழ்விலுள்ள வெறுமைநிலையைப் போக்கி, வாழ்க்கையை முழுமை பெறச் செய்கிறது. மரணத்தை அமரத்துவமாக்குகிறது. வாழ்க்கையின் துரதிருஷ்டங்களையும் இன்னல்களையும் நீக்கி வளமை நிறைந்ததாக்குகிறது.

3. எல்லாக் கலைகளிலும் மாந்தர் பெறும் திறமை, போதிய அளவுக்குத் தொடர்ந்த பயிற்சியின்மையால் ஒளி மங்கிவிடுகிறது. ஆனால் ஆத்மவித்யை என்ற சத்தியஞானமோ என்றும் சுடர்விட்டு வளர்ந்துகொண்டே போகிறது.

4. மிகவும் சிறிய அளவிலுள்ள ஓர் எண்ண அலை கூட மனிதனைத் துன்பத்தில் மூழ்க அடிக்கிறது. ஆனால் அவனுடைய எண்ண அலைகள் முற்றும் அழிக்கப்பட்டுவிட்டால் அளவில்லாத மகிழ்ச்சியையும் அழியாத பேரின்பத்தையும் அவன் அனுபவிக்கிறான்.

5. எந்த ஒரு மனிதனுடைய மனம் அந்தர் யோகத்தில் அமைதியாகவும் ஒருவிதப் பரபரப்புமில்லாமலும் இருக்கிறதோ, ஆசாபாசங்களையும் விருப்பு வெறுப்புக்களையும் பந்தங்களையும் விலக்கிச் செயற்படுகிறதோ, உலக வாழ்க்கையை ஒரு பார்வையாளன் என்ற முறையில் காண்கிறதோ அந்த மனிதன்தான் உண்மையில் மகிழ்ச்சியுடன் வாழ்கிறான்.

6. மனிதனின் உடல் கட்டவிழ்ந்து விட்டால், அவனுடைய மனதினால் கட்டுப்பட்ட விழிப்புநிலை மட்டும்தான் அழிகிறது. மனிதர்கள் தேவையில்லாமல் ஆத்மாவே அழிந்து விட்டதாகக் கருதிப் புலம்புகிறார்கள்.

7. எந்தக் காலத்திலும் எந்த இடத்திலும் ஒன்றுமே தோன்றுவதுமில்லை, அழிந்து போவதுமில்லை. பிரம்மம்தான் தன் மாயையினால் உலகமாகப் பொய்யான தோற்றம் தருகிறது.

8. மண்பானை உடைந்தால் அதனுள் இருக்கும் காற்று விரிந்து பரந்த ஆகாயத்தில் கலந்து விடுகிறது. அதுபோலவே, மனித உடல் அழிந்தவுடன், என்றுமே அழியாததும் ஒன்றையும் சாராததுமான ஆத்மா மட்டுமே எஞ்சுகிறது.

9. ஒவ்வோர் உடலிலும் குடிகொண்டிருக்கும் ஆத்மா ஆகாயத்தை விடப் பரந்தது, புனிதமானது, அழியாதது, நுட்பமானது. அத்தகைய ஆத்மாவுக்குப் பிறப்பு ஏது, மரணம் ஏது?

10. பிரம்மத்தின் உண்மையான சொரூபத்தை உணர்ந்துகொண்ட குரு, சுவை நிரம்பிய ஞானப் பழத்தையும் குளிர்ந்த நிழலையும் தரக்கூடிய இனிய மரம் போன்றவர். அந்த மரத்திலிருந்து ஆத்ம

ஞானத்தை விரும்புபவர்கள் அனைவரும் ஒவ்வொரு நாளும் இனிய நலன்களைப் பெற்றுக்கொள்ள வேண்டும்.

11. சம்சாரமாகிய போலி வாழ்க்கையின் தோற்றம் மனதைக் கட்டுப்படுத்தினால் முடிவடைந்து விடும்.

12. மனம் பரபரப்படையும்போது உலக வாழ்க்கையில் பரபரப்பும் அமைதியின்மையும் ஏற்படுகின்றன. ஆகவே தம்முள் புதைந்திருக்கும் உள்ளக் கிளர்ச்சிகளையும் ஆசைகளையும் அடக்குவதனாலும், பிராணாயாமம் பழகுவதனாலும், அலைபாயும் மனதை அமைதி பெறச் செய்ய வேண்டும்.

13. ஏரியின் கரையிலுள்ள மரங்களின் நிழல் ஏரியில் பிரதிபலிக்கிறது. அதுபோலவே உலகிலுள்ள பலவகையான பொருள்களும் நமது மனதின் விழிப்புநிலை என்ற பரந்த கண்ணாடியில் பிரதிபலிக்கின்றன.

14. உலகபந்தம் என்ற கட்டு உண்மையிலேயே இல்லை. என்றாலும் புலன்கள் உலக இன்பங்களை நுகர விரும்பும்போது பந்தம் தீவிரமாகி இறுக்கமாகப் பிணைத்துக் கட்டுகிறது. உலக ஆசை குறையக் குறைய, உலகபந்தம் என்ற கட்டும் மெல்ல மெல்ல அவிழ்ந்து போகிறது.

15. கடலில் அலைகள் உயர உயர எழும்புகின்றன. அதுபோலவே, நம்முள் பரந்தும் உறுதியாகவும் இருக்கும் பரமாத்மா என்ற சமுத்திரத்திலிருந்து நிலையற்றதும் உறுதியற்றதுமான மனம் என்ற அலை எழுகிறது.

16. தங்கம் என்ற உலோகத்தைப் பற்றி ஒன்றுமே தெரியாத ஒருவன் வளையல் என்ற ஒரு பொருளை மட்டும்தான் பார்க்கிறான். அந்த வளையல் தங்கம்தான் என்ற எண்ணமே அவனுக்கு ஏற்படுவதில்லை. அதுபோலவே, நகரங்கள், வீடுகள், மலைகள், சிங்கம், புலி போன்ற விலங்கினங்கள் ஆகியவை ஓர் அஞ்ஞானிக்குத் தனித்தனிப் பொருள்களாகவே தோற்றமளிக்கின்றன. முழுமையான வரம்பற்ற நிலையிலிருந்து நோக்கும்போது, புலன்களால் அறியப்படும் இந்த உலகம் ஆதாரப் பொருளான பிரம்மமாகத்தான் இருந்து கொண்டிருக்கிறது. இந்த உலகம் பிரம்மத்திலிருந்து வேறுபட்டதில்லை.

17. ஒரு சாதாரண மனிதனுக்கு அதாவது அஞ்ஞானிக்கு இந்த உலகம் ஆழ்ந்த துக்கத்தைத் தருவதாகும். அதே சமயத்தில் உண்மையை அறிந்த விவேகிக்கு இதே உலகம் எப்போதும் பரமானந்தத்தையே தரக் கூடியதாக விளங்குகிறது. எப்படி என்றால், ஒரு குருடனுக்கு உலகம் இருளடைந்ததாகவே இருக்கிறது. கண்கள் உள்ள ஒருவனுக்கோ உலகம் பிரகாசத்துடன் தோற்றமளிக்கிறது.

18. எவன் சூரிய ஒளிக் கிரணங்களைச் சூரியனாகவே உணர்கிறானோ அவனே நிர்விகல்பன் எனப்படுகிறான். எப்படி நுரை, அலை, பனித்துளி, நீர்க்குமிழி ஆகியவை தண்ணீரிலிருந்து வேறுபட்டவையல்லவோ, அதுபோலவே இந்த உலகமும் ஆத்மாவிலிருந்து தோன்றியதுதான், வேறுபட்டதல்ல. பழங்கள், இலைகள், கொடிகள், மலர்கள், கிளைகள், வேர் முதலியவை மரத்தின் விதையில் உள்ளடங்கியிருக்கின்றன; அதுபோலவே. இந்த உலகத்தின் தோற்றமும் பிரம்மத்திடமே அடங்கியிருக்கிறது.

19. பானை முடிவில் மண்ணோடு மண்ணாகிறது. அலைகள் முடிவில் கடல்நீரில் அடங்கி விடுகின்றன. அதுபோலவே, பிரம்மத்திடமிருந்து தோன்றிய உலகமும் முடிவில் பிரம்மத்திடமே திரும்புகிறது.

20. கனவு, விழித்தெழுந்தவுடன் பொய்யாகத் தோன்றுகிறது; கனவில் விழிப்புநிலை பொய்யாகத் தோன்றுகிறது. அதுபோலவே, மரணம் பிறப்பிலும், பிறப்பு மரணத்திலும் பொய்யாகத் தோன்றுகின்றன.

21. ஆத்மாவைப் பற்றிய ஞானம் ஆசை என்ற காய்ந்த புல்லை எரித்து விடுகிறது. இதுவே உண்மையான சமாதிநிலை ஆகும். பேச்சைத் தவிர்த்தல் மட்டுமே சமாதியாகாது.

22. எந்த யோகி எல்லாவற்றையும் கடந்த நிலையை அடைந்து, எப்போதும் குளிர்ந்தும் அமைதியாகவும் இருக்கும். பூர்ண சந்திரனைப் போல் இருக்கிறானோ அவன் உண்மையில் பரமாத்மேதான்.

23. பறவைகளும் விலங்குகளும் மலைக்காடுகளில் கொழுந்து விட்டெரியும் தீயில் பாதுகாப்பைத் தேடாது. அதுபோலவே தீய எண்ணங்கள் பிரம்மத்தை அறிந்தவன் மனதில் உண்டாகாது.

24. பிரதிபலிக்கப்படும் உருவத்தால் ஸ்படிக்கல் மாசு அடைவதில்லை. அதுபோலவே உண்மையை அறிந்த ஞானியை அவனுடைய கர்மாக்களின் பின்விளைவுகள் பாதிக்காது.

25. ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒன்றே என்று உறுதியாகவும் தீர்மானமாகவும் உணர்ந்த அத்வைத ஞானிகள் உலக விவகாரங்களில் ஈடுபடும்போது கனவு உலகில் சஞ்சரிப்பது போலவே நடந்து கொள்கிறார்கள்.

○

# ஆதிசங்கரர் அருளிய ஆத்ம பஞ்சகம்

நான் உடலல்ல; உணர்வுகளல்ல; உள்ளமுமல்ல. நான் என்ற அகந்தையோ அல்லது புத்தியோ அல்ல. மனைவி, மக்கள், நிலம், ஐசுவரியம் ஆகிய எண்ணங்களுக்கெல்லாம் அப்பாற்பட்டவன் நான். முடிவில்லாதவற்றுக்கும், அந்தராத்மாவுக்கும் சாட்சியாகிய நானே சிவமாகும்.

அறியாமையினுல் பழுதை பார்வைக்குப் பாம்பாகக் காணப்படுவதுபோல் ஒருவனது அறியாமையினுல் அவனது உயிரின் அமைப்பே ஆத்மாவாகத் தோன்றுகிறது. ஒருவன் யாரொருவரிடம் நம்பிக்கை வைத்துள்ளாரோ அவர் அவனிடம் விளக்கிச் சொல்லப்படும்போது மாயை மறைகிறது. அவன் பழுதையைப் பார்க்கிறுன். அவ்வாறே குருவின் உபதேசத்தால், 'நான் தனித்தன்மை வாய்ந்த ஆத்மாவல்ல, நானே சிவம்' என்பதை உணர்கிறேன்.

தான் என்ற உண்மை, அறிவு, பேரின்பம் இவை யாவும் இந்த உலகத்தில் அறியாமை காரணமாகப் பொய்யாகப் பிரகாசிக்கின்றன. அவை உண்மையல்ல. ஆழ்ந்த உறக்கத்தின் தூண்டுதலில் கனவுகள் தோன்றுவது போல் பரிசுத்தமான வரையறையற்ற ஒன்றுகிய நானே சிவமாகும்.

இங்கே என்னைத் தவிர வேறென்றுமேயில்லை. வெளியுலகம் மாயையின் தோற்றமேயாகும். 'நான் இரண்டு அல்ல, ஒன்றே' என்ற எண்ணம், கண்ணுடியில் பிரதி பிம்பம் தோன்றுவது போல், என்னுள்ளே பிரகாசிக்கிறது. எனவே நானே சிவமாகும்.

நன் பிறக்கவில்லை, வளரவில்லை, இறப்பதுமில்லை. பிரகிருதியால் பேசப்படும் குணங்கள் அனைத்தும் உடலால் பேசப்படுவதாகும். பிரதிநிதித்துவம் போன்றவை நானென்ற அகந்தையேயாகும். நான் பரிசுத்தமாகிய அறிவாகிய ஆத்மாவல்ல; நானே சிவமாகும்.

நான் பிறக்கவில்லை. எனக்கு எப்படிப் பிறப்போ இறப்போ இருக்க முடியும்? நான் மூச்சல்ல. நான் எப்படிப் பசியால் வாடவோ தாகத்தால் தவிக்கவோ முடியும்? நான் உள்ளமல்ல. எனக்கு எப்படி வறுமையோ ஏமாற்றமோ இருக்க முடியும்? நான் கர்த்தாவுமல்ல. எனவே எனக்குப் பந்தமும் இல்லை; மோட்சமும் இல்லை.

தமிழாக்கம் : எஸ். திலகவதி

---

மதிப்புரை:

## ஸ்ரீராமகிருஷ்ண வர்ணுனுக்ரம கீர்த்தனம்

[ஆசிரியர் : சுவாமி விமலானந்தர், தமிழாக்கம் : சுவாமி மதுரானந்தர்; வெளியிட்டோர்: ஸ்ரீ விவேகானந்த மந்திரம், வெள்ளிமலை, அம்மாண்டிவிளை (அஞ்சல்), 629 204, கன்னியாகுமரி மாவட்டம்; பக்கம்: 68; விலை ரூ. 3]

ஸ்ரீராமகிருஷ்ண மடத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்ட பக்தர்கள் அனைவரும் ஸ்ரீமத் சுவாமி விமலானந்தஜி மகராஜைப்பற்றி நன்கு அறிந்திருப்பார்கள். பல மொழிகளிலும் ஆழ்ந்த புலமை மிக்க அவர் சம்ஸ்கிருதத்தில் 'ஸ்ரீராமகிருஷ்ண வர்ணுனுக்ரம கீர்த்தனம்' என்ற நூலை இயற்றி ஆங்கிலத்தில் விளக்கமும் எழுதியுள்ளார். அந்த நூலின் தமிழாக்கமாக இப்போது இந்த நூல் வெளிவந்திருக்கிறது.

ஸ்ரீமத் சுவாமி மதுரானந்தர் மொழி பெயர்த்திருக்கும் இந்த அரிய நூல் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரைக் குறித்த அகர வரிசைப் பாடல்களைத் தமிழுரையுடன் கொண்டிருக்கிறது.

365 மந்திரங்களாலாகிய பாமாலையைக் கொண்டிருக்கும் இந்த நூலை நாமாவளி போலவும் படிக்கலாம், அர்ச்சனைக்கும் பயன்படுத்தலாம். கருத்தாழம் கருதியும் தமிழ் உரைநடைப்பகுதியைச் சாதாரணமாகவும் படித்து மகிழலாம். கருத்தாழமும் எளிமையும் இனிமையும் இந்த நூல் முழுவதிலும் ஒன்றையொன்று போட்டியிடுகின்றன.

நூலின் முன்னுரையில், ''இந்த நூலைப் படித்துப் பரவசமடையாத ஒரு ஸ்ரீராமகிருஷ்ண பக்தன் இருக்கவே முடியாது என்பது எமது கருத்து'' என்று மூலநூலைப்பற்றிக் குறிப்பிட்டிருப்பது. தமிழாக்கமாகிய இந்த நூலுக்கும் நூற்றுக்கு நூறு பொருந்தும்.

இந்த நூலைப் படிப்பவர்கள் மன நிறைவுடன் ஆக்கியோருக்கு நன்றி செலுத்துவார்கள். தமிழ் மட்டுமே தெரிந்த அன்பர்களும் படித்துப் பயன் பெறவேண்டும் என்ற சீரிய நோக்கத்தில் இந்த நூலை வெளியிட்ட சுவாமி மதுரானந்தரின் பணி தமிழ் மக்களின் மிகுந்த பாராட்டுதலுக்கு உரியது.

—டி. ஜயராமன்

# ஸ்ரீ விவேகானந்த ஜயந்தி விழா

சுவாமி விவேகானந்தரின் 118-ஆவது ஜயந்தி விழா 1980 ஜனவரி 9 புதன்கிழமையன்று மயிலை, ஸ்ரீராமகிருஷ்ண மடத்தில் சிறப்பாகக் கொண்டாடப் பட்டது. காலையில் பஜனை, வேத உபநிஷத், கீதா பாராயணம், விசேஷபூஜை, ஹோமம், பிரசாத விநியோகம் முதலிய நிகழ்ச்சிகள் பக்தி சிரத்தை யுடன் நடந்தேறின.

அன்றைய தினம் காலை ஒன்பது மணிக்கு சென்னைக் கடற்கரையில் நிறுவப்பட்டுள்ள சுவாமி விவேகானந்தரின் திருவுருவச் சிலைக்கு மலர் மாலை கள் அணிவித்து சிறு அளவில் பூஜையும் அங்கு நடைபெற்றது.

உயர்நிலைப் பள்ளிகள், கல்லூரிகள் ஆகியவற் றைச் சேர்ந்த மாணவ மாணவியர், ஆசிரியர்கள், பொதுமக்கள் ஆகியோர் இந்நிகழ்ச்சியில் உற்சா கத்துடன் கலந்து கொண்டனர். மாணவியர்களின் பஜனை, பல கல்வி நிறுவனங்களின் சார்பாக விவே கானந்தரின் திருவுருவச் சிலைக்கு மலர் மாலை அணி வித்தல் ஆகியவற்றைத் தொடர்ந்து லேடி வெலிங் டன் கல்லூரியைச் சேர்ந்த திருமதி உமா அவர் களின் வரவேற்புரையுடன் பொதுக்கூட்டம் துவங் கியது. திருமதி உமா அவர்கள் "என் மகனே! உறுதியாக நில். பிறர் உதவியை எதிர்பார்க்காதே. வேறு மனிதர்களின் உதவியைக் காட்டிலும் ஆண்டவனுடைய உதவி எவ்வளவோ பெரிதல்லவா? பரிசுத்தனாயிரு. பகவானையே நம்பு. அவரை நம்பியுள்ளவரை நீ நேர் வழியில் செல்கிறாய். உன்னை எதுவுமே எதிர்த்து நிற்க முடியாது" என்ற விவேகானந்தரின் அறிவுரையை வரவேற்புரையில் எடுத்துக்காட்டி விளக்கினார்.

அடுத்து உரை நிகழ்த்திய சுவாமி கமலாத்மானந் தர், "நவீன விஞ்ஞானமும் வேதாந்தமும் இணைந்த சமுதாயமாக நமது புண்ணிய பூமி விளங்க வேண் டும் என்று சுவாமிஜி கருதினார். தன்னம்பிக்கை இழந்து சிறுமையின் வடிவங்களாகக் கேள்விக்குறி போன்று கூனிக் குறுகியிருந்த மக்களை, தமது வேதாந்த கர்ஜனையினால் வியப்புக்குறி போன்று தலை நிமிர்ந்து நிற்கச் செய்தவர் சுவாமிஜி" என்று குறிப் பிட்டார்,

ஸ்ரீமத் சுவாமி தபஸ்யானந்தர் தமது முடிவுரை யில், உலகம் முழுவதற்கும் "இந்தியா ஆன்மிக குருவாக விளங்க வேண்டும் என்று சுவாமிஜி விரும் பினார். உண்மையான தேசபக்தி எது, உண்மை யான தெய்வபக்தி எது என்பதைப் புரிந்து கொள்ள விரும்புபவர்கள் ஒவ்வொருவரும் சுவாமிஜியின் நூல்களை அவசியம் கற்க வேண்டும். சுவாமிஜியின் கருத்துக்கள் அன்று போல் இன்றும் புதியனவாக வும் சமுதாயத்திற்கு அத்தியாவசியமாகத் தேவைப் படுவதாகவும் இருக்கின்றன" என்று குறிப்பிட்டார்.

விவேகானந்த கல்லூரியைச் சேர்ந்த பேராசிரியர் டாக்டர் கணேசன் அவர்கள் 'ஆத்மனோ மோட்சார் தம் ஜகத் ஹிதாய ச' என்ற விவேகானந்தரின் வாச கத்தை நன்றியுரையின்போது விளக்கிப் பேசினார்.

மாலையில் வழிபாட்டிற்குப் பிறகு மடத்தில் திரளாக மக்கள் குழுமியிருந்தனர். அவ்வமயம் ஸ்ரீமத் சுவாமி தன்மயானந்தரின் வரவேற்புரையைத் தொடர்ந்து, மாண்புமிகு தமிழக ஆளுநர் திரு பிரபுதாஸ் பட்வாரி அவர்களும் ஸ்ரீமத் சுவாமி தபஸ்யானந்தர் அவர் களும் 'விவேகானந்தரின் வாழ்வு—வாக்கு' குறித்து உரை நிகழ்த்தினர்.

தமிழக ஆளுநர் தமது உரையின்போது, சுவாமி விவேகானந்தர் 'மக்கள் தொண்டே மகேசன் தொண்டு' என்ற கருத்தைச் சிறப்பாக வலியுறுத்தி யுள்ளார். அருளுரை வழங்குவதுடன் நின்றுவிடும் மடாதிபதிகள் போன்று பேச்சளவில் இல்லாமல் செயல் வீரராகவும் திகழ்ந்தவர் விவேகானந்தர். அவரால் நிறுவப்பெற்ற ஸ்ரீராமகிருஷ்ண மடமும் சங்கமும் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர், சுவாமி விவே கானந்தர் ஆகியோரின் அடிச்சுவட்டைப் பின்பற்றி அகில இந்திய ரீதியில் இந்தியாவின் மறுமலர்ச்சிக்கு ஆக்கப்பூர்வமான பணிகளில் ஈடுபட்டு வருகிறது" என்று குறிப்பிட்டுத் தமது அக் கருத்துக்களை விளக் கிப் பேசினார்.

அடுத்து ஸ்ரீமத் சுவாமி தபஸ்யானந்தரின் நீண்ட சொற்பொழிவு இடம் பெற்றது. "ஒவ்வொரு ஜீவான் மாவிலும் தெய்விகத் தன்மை மறைந்திருக்கிறது. வெளியேயும் உள்ளேயும் இருக்கும் இயற்கையைக் கட்டுப்படுத்தி, உள்ளே குடிகொண்டுள்ள இந்தத்

தெய்விகத் தன்மையை மலரும்படி செய்வதுதான் முடிவான இலட்சியமாகும். இதைக் கர்மயோகம், கடவுள் வழிபாடு, மனக் கட்டுப்பாடு, தத்துவ விசாரம் — என்னும் இவைகளுள் ஒன்றினாலோ, பலவற்றினாலோ செய்து சாதித்துச் சுதந்திரமாய் இரு. இதுவே சமயத்தின் முழு உண்மை ஆகும். சமய சித்தாந்தங்களோ, ஆகமக் கட்டுப்பாடுகளோ, சமய சடங்குகளோ, சாஸ்திரங்களோ, கோவில்களோ, அவை போன்ற மற்றவைகளோ இதற்கு உதவி புரியும் இரண்டாம்தரமான முக்கியத்துவமுடைய சாதனங்களாக மட்டுமே அமைந்திருக்கின்றன'' என்ற சுவாமி விவேகானந்தரின் கருத்தை விளக்குவதாக சுவாமி தபஸ்யானந்தரின் முழு சொற்பொழிவும் அமைந்தது. அவர் தமது சொற்பொழிவின்போது ஸ்ரீராமகிருஷ்ணருக்கும் நரேந்திரருக்கும் நிலவிய தெய்விகத் தொடர்பு, விவேகானந்தரின் வாழ்க்கையில் தமிழ்நாடு பெற்றுள்ள இடம், பொதுவாக நாம் தேசபக்தர்கள் என்று கருதுபவர்களைவிட பரிபூரண தேசபக்தராக விளங்கியதோடு ஸ்ரீராமகிருஷ்ணரால் உலகிற்கு அளிக்கப்பட்ட ஆன்மிகத் தூதுவராக விவேகானந்தர் விளங்கினர். நவீன இந்தியாவின் பரமாசாரியரான விவேகானந்தரின் நூல்களைப் படிப்பதால் மேலும் மதத்தை தெளிவாகத் புரிந்துகொள்ள முடியும், சிறந்த குடிமக்களாகத் திகழ முடியும் போன்ற கருத்துக்களையும் தெளிவாகவும் விளக்கமாகவும் கூறினர்.

13—1—80 ஞாயிறன்று விவேகானந்த ஜயந்தி விழாப் பொதுக்கூட்டம் விவேகானந்தர் ஹாலில் நடைபெற்றது. அன்று மாலை 5 மணி முதல் 5-30 வரை பக்திப் பாடல் நிகழ்ச்சி இடம் பெற்றது. அதைத் தொடர்ந்து ஸ்ரீமத் சுவாமி தபஸ்யானந்தரும் எஸ. மணவாளன் அவர்களும் விவேகானந்தரின் வாழ்வு-வாக்கு ஆகியவைபற்றி பல நிகழ்ச்சிகளின் மூலமும் உபதேசங்களின் மூலமும் விளக்கிப் பேசினர். *

31-12-79 திங்கட் கிழமை மாலை 6 மணிக்கு பாண்டிச்சேரியிலுள்ள வேங்கட் நகரில் திரு கைலாஸம், நடராஜப்பிள்ளை ஆகியோர் ஏற்பாடு செய்திருந்த பொதுக் கூட்டத்தில் 'ஆன்மிக வாழ்க்கை' என்ற தலைப்பில் ஸ்ரீமத் சுவாமி தன்மயானந்தர் உரை நிகழ்த்தினர்.

## ஈச்வரசந்திர வித்யாசாகர்

### நாடோடி

ஒரு சமயம் ஈச்வரசந்திர வித்யாசாகர் தம் நண்பர் கிரீஷ்சந்திர வித்யாரத்தினத்துடன் கால்னு என்னும் கிராமத்தை நோக்கி நடந்துகொண்டிருந்தார்.

வழியில் ஒரு வேலையாள் காலராவினுல் அவதிப்பட்டுக்கொண்டு, பாதையில் படுத்திருந்ததைக் கண்டார். அவனுக்கு உதவி செய்யவோ அவனைத் தூக்கவோ அங்கு யாருமே இல்லை. அவனது ஆடையிலிருந்து துர்க்கந்தம் வீசியது. தெருவில் சென்றவர்கள் மூக்கைப் பிடித்துக்கொண்டு, தலையைத் திருப்பிக் கொண்டு அப்பால் சென்றுர்களே தவிர, அவனுக்கு உதவி செய்வார் யாருமில்லை.

இதைக் கண்ட வித்யாசாகர் தம் நண்பரிடம், ''இன்று நாம் எவ்வளவோ புண்ணியம் செய்திருக்கிறோம்'' என்றுர்.

''எப்படி?'' என்று கேட்டார் நண்பர்.

''கஷ்டப்படுகிறவர்களுக்கு உதவ வாய்ப்புக் கிடைத்தால் அதைவிடப் பாக்கியம் வேறு என்ன இருக்கிறது! இதோ இந்தக் காலரா வியாதிக்காரனுக்கு நாம் உதவும் பாக்கியத்தைப் பகவான் நமக்கு அளித்துள்ளார்'' என்று கூறி, வித்யாசாகர் அந்த ஆளைத் தம் முதுகில் தூக்கிக்கொண்டார். நண்பர் ஒரு பக்கமாக விழுந்து கிடந்த அந்த ஆளின் மூட்டையைத் தூக்கிக்கொண்டார்.

இருவரும் கால்னு கிராமத்தை அடைந்து, அங்கு ஒரு வீட்டில் அந்த வியாதியஸ்தன் தங்க ஏற்பாடு செய்து, ஒரு வைத்தியரைக் கொண்டு அவனுக்கு மருந்து கொடுக்கச் சொன்னுர்கள். இரண்டு நாள் அந்தக் கிராமத்தில் தங்கியிருந்து, அவனுக்கு உடம்பு குணமான பிறகுதான் அவர்கள் ஊர் திரும்பினுர்கள்.



# ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை - 600 004

## 1980 பிப்ரவரி மாத நிகழ்ச்சிகள்

**பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண ஜயந்தி விழா :**

18-2-80 திங்கள் ஜன்மதிதி : விசேஷ பூஜை, பஜனை, ஹோமம் முதலியன
(காலை 5 மணி முதல் 11-30 மணி வரை)

மாலை 7 மணிக்கு பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் பற்றிய சொற்பொழிவு (மாலை வழிபாட்டிற்குப் பிறகு)

பொது விழா நிகழ்ச்சிகள்

19-2-80 செவ்வாய் முதல் 24-2-80 ஞாயிறு வரை மாலை 5-30 மணிக்கு

19-2-80 செவ்வாய் : பக்திப் பாடல்கள்

20-2-80 புதன் : இசை சொற்பொழிவு - அஜாமிளன் கதை—திரு ஆர். கோதண்டராமன்

21-2-80 வியாழன் : சுவாமி ராமகிருஷ்ணானந்தர் தினம்
பேசுபவர் : திரு ஜகன்னாதாச்சாரியார் (தமிழ்)

22-2-80 வெள்ளி : ஸ்ரீ சாரதா தேவியார் தினம் பேசுபவர் : திருமதி பி. காமகோடி (தமிழ்)

23-2-80 சனி : சுவாமி விவேகானந்தர் தினம்
பேசுபவர் : சிலம்புச்செல்வர் திரு ம. பொ. சிவஞானம் (தமிழ்)

24-2-80 ஞாயிறு : பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் தினம்
தலைவர் : மேதகு தமிழக ஆளுநர் திரு பிரபுதாஸ் பட்வாரி
பேசுபவர் : வாகீசகலாநிதி கி. வா. ஜகந்நாதன்

21, 22, 23, 24 ஆகிய நான்கு நாட்களிலும் லக்னௌ ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷனின் தலைவர் சுவாமி ஸ்ரீதரானந்தஜி அவர்கள் ஆங்கிலத்தில் உரை நிகழ்த்துவார்கள்.

**சத்சங்கம் :** ஞாயிறுதோறும் மாலை 4 மணி முதல் 5-30 மணி வரை

3-2-80 1. ஸ்ரீமத் பாகவதம்—திரு 'அண்ணா' சுப்ரமண்யம்

10-2-80 2. ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமம்—திரு வி. ஆர். கல்யாணசுந்தர சாஸ்திரிகள்

17-2-80 3. ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம்—திரு வி. எஸ். வி. குருசுவாமி சாஸ்திரிகள்

மாலை 5-35 மணி முதல் 6-30 மணி வரை சுவாமி கபீரானந்தர் அவர்கள் ஸ்ரீமத் பகவத்கீதை என்ற தலைப்பில் பிப்ரவரி 3, 10, 17 ஆகிய தேதிகளில் ஆங்கிலத்தில் சொற்பொழிவு நிகழ்த்துவார்கள்.

மடத்தில் வாரநாட்களில் நடைபெறும் சொற்பொழிவுகள், வேறு சில நிகழ்ச்சிகள் ஆகியவை வழக்கம் போல் நடைபெறும். (ஸ்ரீ ராமகிருஷ்ண ஜயந்தி விழா நாட்களிலும், ஏகாதசி நாட்களிலும், வார நாட்களில் நடைபெறும் வகுப்புகள் இராது).

**விசேஷ தினங்கள்:**

2-2-80 சனி அத்யாத்தும ராமாயணம்—திரு பி. ராமகிருஷ்ணன்

3-2-80 ஞாயிறு மாலை 7 மணிக்கு சியாம நாமசங்கீர்த்தனம்

10-2-80 ஞாயிறு மாலை 7 மணிக்கு ஸ்ரீ ராமகிருஷ்ண நாம சங்கீர்த்தனம்

12-2-80 & 26-2-80 ஆகிய ஏகாதசி தினங்களில் மாலை வழிபாட்டிற்குப் பிறகு
ஸ்ரீராமநாம சங்கீர்த்தனம் நடைபெறும்.

14-2-80 வியாழன் மகா சிவராத்திரி இரவு 8 மணி முதல் விசேஷ பூஜை, பஜனை
முதலியன நடைபெறும்.

17-2-80 அந்தர்யோகம் (சாதனை தினம்)

17-2-80 மாலை 7 மணிக்கு ஸ்ரீசாரதா நாம சங்கீர்த்தனம்

அனைவரையும் அனைத்து நிகழ்ச்சிகளிலும் கலந்துகொள்ளுமாறு அன்புடன் அழைக்கிறோம்.

தொலைபேசி : 71231

தலைவர்,

**ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004**

